# தர்மசக்கரம்







பிங்கள ௵ மார்கழி ௴ சக்கரம் 26 ஆரம் 12

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை — 639 115 திருச்சி ஜில்லா

# அறிவிப்பு

ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியன்றே தவருமல் தர்மசக்கரம் சந்தாதாரர்களுக்குக் கிடைக்கும்படி தபாலில் முற்கூட்டியே சேர்க்கப்படு கிறது. கார்த்திகை மாத இதழ் உரிய காலத்தில் கிடைக்கவில்லை என்று பல கடிதங்கள் சென்ற மாதத்தில் வந்துள்ளன. அவைகளுக்குப் பதில் எழுதவில்லை.

வழக்கம்போல் கார்த்திகை மாத இதழ்கள் முற்கூட்டியே தபாலா பீஸில் சேர்க்கப்பெற்றன. அவைகளைத் தபாலாபீஸில் முத்திரையிட்டுக் கட்டிவைத்திருந்தார்கள். புயலாலும், வெள்ளத்தாலும் போக்குவரத்து துண்டிக்கப்பட்டது. தபாலாபீஸினின்று பைகள் நவம்பர் மாதம் 23ஆம் தேதிதான் R. M. S.க்குப் போய்ச் சேர்ந்தன. பத்திரிகைகள் முக்கியமான தபால்கள் அல்லவாதலால் சமயம் வாய்க்கும்பொழுது வெளியூர்களுக்கு அனுப்பியுள்ளார்கள். ஆதலால் நவம்பர்மாத இறுதிக்குள் அனைவருக்கும் கார்த்திகை இதழ் கிடைத்திருக்கவேண்டும்.

தபோவனம் சம்பந்தப்பட்டவரை புயல், வெள்ளம் காரணமாகப் பயிர்கள்தான் பாதிக்கப்பட்டன. சிறிதளவு பொருட்சேதமுண்டு. திருவரு ளால் வேறு விபத்து ஏதுமில்லை.

மூன்று புதிய சந்தாக்களைச் சேர்த்துத் தரும்படி தங்களைக் கேட்டுக் கொண்டோம். இதுவரை இதை நிறைவேற்ருதவர்கள் சிரத்தை எடுத்துச் செய்துதர வேண்டுகிருேம்.

கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் வாசகசாலைகள் உள்ளன. சங்கங் களால் நடத்தப்பெறும் வாசகசாலைகள் இருக்கின்றன. சில ஊர்களில் அரசாங்கமும் வாசகசாலைகளை ஏற்படுத்தியுள்ளது. விஷயசுகங்களில் ஈடு படுதற்குத் தூண்டும் பத்திரிகைகளை வாசகசாலைகளில் ஏராளமாகக் காண லாம். நல்ல கருத்துக்களைத் தரும் ஆன்மீகப் பத்திரிகைகளை வாசகசாலை களில் காண்பது அரிதாக இருக்கும்.

நல்ல கருத்துக்களை வழங்குவது நாம் மக்களுக்குச் செய்யும் சேவை களுள் தலைத்தரமானதாகும். மேலான கருத்துக்களை வழங்கும் பத்திரிகை களுள் தர்மசக்கரம் ஒன்று. வாசகசாலைகளில் தர்மசக்கரம் இருக்குமாகில் பலபேர் படித்துப் பயன்பெறுவார்கள். சந்தா தொகை செலுத்த இயலாத வர்கள் பலபேருக்கு இது பயன்படும்.

பொருள் வசதிவாய்ந்தவர்கள் தம் பெயரில் டிபாஸிட் சந்தா வைத் துக்கொண்டு பள்ளி, கல்லூரி, வாசகசாலைகள், சங்கங்கள் முதலான பொது ஸ்தாபனங்களுக்கு மாதந்தோறும் தர்மசக்கரம் கிடைக்கும்படி செய்யலாம். எப்பொழுது வேண்டுமானுலும் தாங்கள் செலுத்தும் ரூபாய் நூறையும் தாங்களே திரும்பப் பெற்றுக்கொள்ளத் தங்களுக்கு உரிமையுண்டு. சிறிய செலவில் பெரிய பயன் தரக்கூடிய சேவையைச் செய்ய வேண்டுகிருேம். பொருளைப் பலருக்கும் பயன்படும்படியாகத் தர்மம் செய்வதற்கு இது நல்ல தோருவாய்ப்பாகிறது.

15.12.77

# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

| சக்கரம் 26 | பிங்கள ஞூ மார்கழி மீ | ஆரம் 12 |
|---|---|---|

பொருளடக்கம் பக்கம்



## சந்தா விவரம்

**1. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**2. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**3. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# அந்தர்யோக விவரங்கள்

**திருநெல்வேலி ஜில்லா—சேரன்மஹாதேவியில் 18—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *பாரத்வாஜ ஆச்ரமம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-50ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**சென்னையில் 18—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: புரசவாக்கம் ஸர். M.CT. முத்தையாசெட்டியார் மாணவர் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 8—1—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: விவேகானந்த கல்லூரி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 8—1—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சிவானந்த பிரார்த்தனை மண்டபம்*
*நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.

# தர்ம சக்கரம்

சக்கரம் 26 நள ௵ தை—பிங்கள ௵ மார்கழி

1977



प्रज्ञानं ब्रह्म

எழுமின் விழிமின் செந்நெறி சார்மின்

ஆசிரியர்
சுவாமி நித்தியானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை—639 115 திருச்சி ஜில்லா

## பொருளடக்கம்

---



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 26 | பிங்கள ஸ்ரீ மார்கழி மீ | ஆரம் 12

## பிரார்த்தனை

अनेकजन्मसम्प्राप्त कर्मेन्धनविदाहिने
आत्मज्ञानाग्निदानेन तस्मै श्रीगुरवे नमः

அனேக ஜன்ம ஸம்ப்ராப்த கர்மேந்தன விதாஹினே
ஆத்மஞானாக்னிதானேன தஸ்மை ஸ்ரீகுரவே நம:

பல பிறவிகளில் சேர்ந்த கர்மம் என்னும் விறகுக் கட்டைகளுக்கு ஆத்ம ஞானாக்னியை மூட்டி எரித்தவர் குரு. அவருக்கு நமஸ்காரம்.

மூர்த்தியெல்லாம் வாழியெங்கள் மோனகுரு வாழியருள்
வார்த்தையென்றும் வாழியன்பர் வாழிபராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

ஆற்றல் மிகப்படைத்தது சத்தியம்.

தன்னைத் தூய்மைப்படுத்தியவனே பிறர்க்குப் பயன்படுகிறான்.

தனி உரிமையோ சலுகையோ தேடுவது யாருக்குமே தகாது.

சுயநலத்தை ஒழித்தவன் அரிய பெரிய செயல்களைச் செய்கிறான்.

சிற்றின்பம் ஒவ்வொன்றும் இறுதியில் துன்பமாக உருமாறுவது உறுதி.

சன்மார்க்கத்தில் செல்லுகிறவனுக்கு யாரோடும் சமரசப்படுத்துவது எளிது.

அருளைச் சார்ந்திருக்குமளவு மானுட வாழ்வு பெருவாழ்வாகப் பரிணமிக்கிறது.

நிலத்தில் போட்ட மீன் துள்ளுவது போன்று காமத்துக்கு இடம் கொடுத்துள்ள மனம் துள்ளுகிறது.

அனைத்துக்கும் ஆற்றல் அளிக்கும் ஆத்ம சொரூபம் கட்புலனாகாது உள்ளத்தினுள் குடியிருக்கிறது.

மலரின் மணம் காற்றை எதிர்த்துப் போகாது; ஆனால் மனிதனது மாண்போ எங்கும் பரவுகிறது.

உன் சொரூபம் முழுதையும் தெய்வத்துக்கு உரியதாக்கு. அப்பொழுது தெய்வம் உனக்கு உரியவராகிறார்.

தன் சிறுமையையும் தெய்வத்தின் பெருமையையும் உணருகிறவன் முறையாகப் பிரார்த்தனை பண்ணுகிறான்.

வெறுப்பு, சினம், தற்பெருமை முதலியன உடலுக்குரியவை. அன்பு, ஆதரவு, பணிவு முதலியன ஆத்மாவுக்குரியன.

பயங்கொள்ளியாக ஆபத்திலின்று தப்பியோட முயலுகிறவனைவிட எதிரியோடு எதிர்த்துப் போராடி மடிந்து போகிறவன் மேலானவன்.

உள்ளொளியைப் பின்பற்று. அதனால் புறத்திலுள்ள இருளில் நீ அல்லல் படமாட்டாய். இயற்கைத் தாய் உயிர்களனைத்தையும் யாண்டும் பேணி வருகிறாள்.

### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

பரமஹம்சதேவர் பக்தர்களிடம் பாடல் ஒன்று பாடலானார். அவர் பாடிய பாடலின் கருத்து வருமாறு: "ஓ மனமே! கடவுளின் கட்டழகு என்னும் கடலுக்குள் நீ ஆழ்ந்து மூழ்குவாயாக. ஆழ்ந்து மூழ்குவாயாக. அக்கடலின் ஆழ்ந்த பகுதியை நீ எட்டுவாயாகில் பேரன்பு என்னும் ரத்தினத்தை ஆங்கு நீ அடையப் பெறுவாய்........."

பக்தர்கள் தாம் பரமபதத்துக்கு உயர்த்தப் பட்டவர்கள் போன்று பரமானந்தத்தில் திளைத்திருந்தனர்.

பரமஹம்சதேவர்: (பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்களைப் பார்த்து) "உள்ளத்தினுள் ஆழ்ந்து மூழ்கிப் பழகுங்கள். பரமனிடத்துப் பேரன்பு பூணும் பயிற்சியைப் பெறுங்கள். தெய்வீக அன்பு என்னும் சாகரத்தினுள் மூழ்கிப் பழகுங்கள். நீங்கள் எப்படி எப்படியெல்லாம் பிரார்த்தனை பண்ணுகிறீர்கள் என்பதை நான் கேட்டிருக்கிறேன். பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்களாகிய நீங்கள் தெய்வத்தின் பேராற்றலைப் பற்றிப் பெருமிதமாகப் பாராட்டுகிறீர்கள். அப்படிச் செய்வதற்கு அவசியம் யாது? 'ஓ இறைவா! வெட்டவெளியை நீ படைத்துள்ளாய். ஆழ்கடல்களை நீ அமைத்துள்ளாய். சந்திரலோகம், சூரியலோகம், நக்ஷத்திரலோகம் ஆகியவைகளை நீ அமைத்துள்ளாய் என்றெல்லாம் திரும்பத் திரும்பப் போற்றுகிறீர்கள். இதற்கு அவசியம் யாது உளது?

"பணக்காரன் ஒருவனுடைய பங்களாவைப் பார்த்த மாத்திரத்தில் பொதுமக்கள் வியப்பு மிக அடைகின்றனர். தோட்டத்திலுள்ள மரங்கள், பூ வகைகள், தடாகங்கள் ஆகியவைகள் அற்புதமாக அமைந்திருக்கின்றன. பங்களாவிற்குள் பேட்டி மண்டபம் அழகிய காட்சிகொடுக்கிறது. அரிய படங்கள் ஆங்கே மாட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. இவை யாவையும் பார்த்துத் திகைத்து நிற்கின்றனர் பெரும்பாலர். ஆயினும் என்ன அதிசயம்! அப்பங்களாவின் சொந்தக்காரனைப்பற்றி எண்ணிப்பார்ப்பவர்கள் மிகமிகச் சிலர். யாரோ இரண்டொருவர் அம்மனிதனைப்பற்றி விசாரிக்கிறார்கள். அந்தப் பங்களாவின் அமைப்பைப் பார்த்து பிரமித்து இருப்பதற்கு நிகர் பிரபஞ்சத்தின் அமைப்பைப் பார்த்து அதிசயம் பூணுவது. ஆனால் கடவுள் நாட்டம் கொள்ளுகிறவன் அவனுடைய சிருஷ்டியைப்பற்றி அதிகம் எண்ணுவதில்லை. கடவுளைக் காணவும் அவரோடு இணக்கம் கொள்ளவும் அவர்கள் அவாவுறுகின்றனர். நாம் ஒருவரோடு ஒருவர் உரையாடுவது போன்று தெய்வத்தோடு இணக்கம் கொள்ளலாம். பக்திபூண்டிருக்கிறவர்க்குக் கடவுளின் காட்சியைக் காண்பது முற்றிலும் சாத்தியம். இது என்னுடைய அனுபவம். ஆனால் இந்த அனுபவத்தின்மீது விசுவாசம் வைக்கின்றவர்கள் யார் என்பது எனக்கு விளங்கவில்லை.

"சாஸ்திரங்களைப் படித்து ஒருவன் கடவுளைக் காணமுடியுமா? முறையாகச் சாஸ்திர ஆராய்ச்சி பண்ணுவதால் கடவுள் இருக்கிறார் என்னும் நம்பிக்கை உண்டாகலாம். அதற்கு மேல் சாஸ்திர ஆராய்ச்சியில் பயன் ஒன்றுமில்லை. கடவுள் தம்மை யாருக்கு விளக்கிக் காட்டுகிறார் என்பது கேள்வி. பக்தியில் யார் ஒருவன் ஆழ்ந்து மூழ்குகின்றானோ அவனுக்கே இறைவனுடைய காட்சி கிட்டுகிறது. உள்ளன்போடு கடவுள் நாட்டம் பூணுகின்றவர்களுக்குக் கிருபைகூர்ந்து இறைவன் தம்முடைய சொருபத்தைத் தர்சனமாக விளக்கிக் காட்டுகிறார். அதன் பிறகு கடவுளைப்பற்றிய சந்தேகங்கள் எல்லாம் அகன்றுபோய்விடுகின்றன. மானுடன் ஒருவன் ஆயிரம் ஆயிரம் சாஸ்திரங்களை ஆராய்ச்சி பண்ணலாம். ஆயிரம் ஆயிரம் பாடல்களை மனப்பாடம்பண்ணி ஒப்பிக்கலாம். ஆயினும் அத்தகையவன் அருள்நாட்டம் பூண்டவனை இறைவனிடத்துப் பக்திபண்ணுவிட்டால் அவருடைய சொருபத்தைக் கிரகிக்க அன்னவனுக்கு இயலாது. பாண்டித்தியத்தின் மூலமாகப் பொதுமக்களைப் பிரமிக்கச் செய்யலாம். ஆனால் அதன் மூலம் பரமனை அடையமுடியாது.

"சாஸ்திரங்களும் அவைகளுக்கு வியாக்கியா

ஙங்களாக அமைந்த புஸ்தகங்களும் ஏராள மாக இருக்கின்றன. ஆயினும் அவைகளை ஆராய்ச்சிபண்ணுவதன் வாயிலாக மனிதன் அடைவதுதான் யாது? இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகாது அவருடைய அனு பூதியை யாருமே பெறமுடியாது. ஆதலால் அவருடைய அருளை நாடிப் பேர் ஆர்வம் பூண் டிருங்கள். அருள் நாட்டம் உங்களிடத்து மேலும் மேலும் ஓங்கவேண்டும். எப்பொழுது நீங்கள் அவருடைய அருளுக்குப் பாத்திரமா கின்றீர்களோ அப்பொழுது அவரை அனுபூதி யில் அறிந்துகொள்ளவும் அவரோடு இணக்கம் கொள்ளவும் உங்களுக்குச் சாத்தியமாகும்.''

சப்ஜட்ஜ் (உப நியாயாதிபதி) : ''ஐயனே, கடவுள் கருணையைப் பொழிவதில் தாரதம் மியம் இருக்கிறதா? அப்படித் தாரதம்மியம் இருக்குமாகில் அவர் பட்சபாதம் உடையவர் என்னும் குற்றத்துக்கு ஆளாகிறார்.''

பரமஹம்சதேவர் : ''தாம் என்ன பகருகின் றீர்? சந்திரன் வெளிச்சம் கொடுக்கின்றது. மின்மினிப்பூச்சியும் வெளிச்சம் கொடுக்கின் றது. ஆனால் இவ்விரண்டுக்குமிடையில் தார தம்மியம் இல்லையா? தாம் கேட்கிற இதே கேள்வியை ஈஸ்வர சந்திர வித்தியாசாகரும் என்னிடம் கேட்டார். அவர் இயம்பியதாவது: 'கடவுள் ஒருவனுக்கு அதிக வல்லமையையும் மற்றொருவனுக்குக் குறைந்த வல்லமையையும் தருகிறார் என்பது உண்மைதானா ஐயனே!'. அதற்கு மறுமொழியாக நான் இயம்பியதா வது: 'எங்கும் வியாபித்துள்ள பரம்பொருள் எல்லார் உள்ளத்திலும் வீற்றிருக்கிறார். ஓர் எறும்பின் உள்ளத்தில் அவர் இருக்கிறார். ஓர் யானையின் உள்ளத்திலும் அவர் இருக் கிறார். இவ்விரண்டு ஜந்துக்களிடத்தும் ஆற்ற லில் வித்தியாசம் இருப்பதைக் காண்கிறோம். எல்லாரிடத்தும் ஈசனுடைய மகிமை ஒரே பாங்கில் இருக்கிறதென்றால் பிறகு தங்களைக் காண நாங்கள் ஏன் இங்கு வரவேண்டும்? தங்களுக்கு வாய்த்துள்ள கீர்த்தியும், மற்றவர் களுக்கு அமைந்துள்ள கீர்த்தியும் ஒரேபாங்கில் அமைந்திருக்கின்றனவென்று இயம்பலாமா? அல்லது புறத்தோற்றத்தில் மனிதனிடத்தில் இல்லாத அசாதாரணமான அமைப்பு இரண்டு கொம்புகள் தங்களுக்கு அமைந்திருக்கின்ற னவா? இல்லை. அப்படி ஒன்றும் இல்லை. தங்களிடத்தில் ஜீவகாருண்யம் இருக்கிறது. தங்களிடத்தில் பாண்டித்தியம் இருக்கிறது. தங்களிடத்தில் இருக்கிற இதே அளவையில் ஜீவகாருண்யமும் பாண்டித்தியமும் எல்லா ரிடத்திலும் இருக்கின்றன என்று இயம்புவது ஒவ்வாது. இந்தத் தனிச் சிறப்பு தங்களிடத் தில் இருப்பதால்தான் தங்களுடைய புகழ் எங்கும் பரவியிருக்கிறது.' உப நியாயாதிபதி யிடம் மேலும் அவர் பகர்ந்ததாவது: ஒற்றை யாள் ஒருவன் இருந்துகொண்டு நூறு பேரைத் தோற்கடிக்கின்ற வல்லமை படைத்தவனாக இருக்கிறான் என்பதை நீர் அறிந்திருக்கிறீர் அல்லவா? மேலும் ஒரு மானிடனைப் பார்த்து அஞ்சி மற்றொருவன் ஓட்டம் பிடிக்கிறான். அத் தகைய காட்சியையும் தாம் பார்க்கிறீர். மக்க ளுக்கு இடையில் ஆற்றல் வேற்றுமை இருப் பது வெளிப்படை. அது உண்மை அன்று என் றால் கேசவ சந்திரசேனரைப் பலபேர் ஏன் போற்றிப் பாராட்டுகிறார்கள்?

''பகவத்கீதையில் ஒரு கருத்து வந்துள்ளது. ஒரு மனிதனிடத்தில் கல்வித் திறமை இருக் கிறது. இன்னொருவனிடத்து இன்னிசை பாடும் வல்லமை இருக்கிறது. வேறொருவனி டத்துப் பேச்சுத்திறமை இருக்கிறது.ஏதேனும் ஒரு திறமையை முன்னிட்டு ஒரு மனிதன் பல ரால் போற்றிப் பாராட்டப்படுவானாகில் அந் தத் திறமையை அவனிடத்தில் அமைந்துள்ள ஈஸ்வர விபூதியாகக் கருதவேண்டும். இதுவே கீதையின் கருத்து ஆகும்.

''பிரம்ம சமாஜத்து அங்கத்தினர் ஒருவர் உப நியாயாதிபதியைப் பார்த்துக் கேட்கின்றார்: அவர் இயம்புவதை ஏற்றுக்கொள்ளுதலில் இப் போது உங்களுக்கு ஆட்சேபம் யாது உளது?''

பரமஹம்சதேவர் (பிரம்ம சமாஜத்து அங்கத் தினரைப் பார்த்துச் சிறிது விறுவிறுப்புடன் இயம்புகிறார்) : ''நீ எத்தகைய மானுடனாக இருக்கின்றாய்? சிந்தித்துப் பார்க்காமலும், சொந்தக்கொள்கை ஏதுமில்லாமலும் காதுக்கு எட்டுகிற வார்த்தைகளை யெல்லாம் நீ ஏற்றுக் கொள்ளுகின்றாய். அது வெறும் பாசாங்கு அல்லவா! வெறும் போலி மானுடனாக நீ தென்படுகின்றாய்.''

இதைக் கேட்ட பிரம்ம சமாஜத்து அங்கத்

தினன் ஓர் இக்கட்டில் அகப்பட்டுக் கொண்ட வன் போன்று தென்பட்டான்.

உப நியாயாதிபதி: "ஐயனே! நாம் உலகைத் துறந்து விடுவது அவசியமா?"

பரமஹம்சதேவர்: "இல்லை. தாம் ஏன் உலகைத் துறக்கவேண்டும்? சமுதாயத்தில் இருந்து கொண்டே மானுடன் ஒருவன் ஈசுவர அனுபூதியைப் பெறுவது சாத்தியம். ஆனால் ஆரம்பதசையில் அவன் சிறிது காலம் ஏகாந்தத்தில் இருந்து பழகவேண்டும். ஜன சஞ்சாரமில்லாத இடத்தில் அமர்ந்துகொண்டு அவன் ஆழ்ந்து ஆத்ம சாதனங்களில் ஈடுபட வேண்டும். கல்கத்தா நகரில் வசித்து வருகிற ஒருவன் தன் வீட்டுக்கு அருகில் தனி அறையொன்று வாடகைக்கு அமர்த்திக்கொள்ள வேண்டும். உணவு வேளைகளில் மட்டும் அவன் சொந்த வீட்டுக்கு வந்து ஆகாரம் ஏற்றுக்கொண்ட உடனே தனி அறைக்குத் திரும்பிப் போய்விட வேண்டும். அவ்வறையில் அமர்ந்து கொண்டு ஆத்ம சாதனங்களில் அவன் ஆழ்ந்து மூழ்கிப் பழகவேண்டும். இப்பயிற்சி வெறும் மேற்போக்காக இருக்கலாகாது. பேரார்வத்துடன் இதில் ஈடுபடுவது அவசியமாகிறது. கேசவ சந்திரசேனர், பிரதாப் முதலியவர்கள் என்னிடம் 'ஐயனே, ஜனக மகாராஜனுடைய மார்க்கத்தை நாங்கள் பின்பற்றுகின்றோம்' என்று இயம்பினார்கள். அதற்கு நான்கொடுத்த விடையாவது, 'வெறும் பேச்சில் ஒருவன் ஜனக மகாராஜா ஆக முடியாது. ஆரம்பத்தில் அந்த அரசன் ஏகாந்தத்தில் இருந்து கொண்டு அரிய பெரிய தவங்களையெல்லாம் புரியலானார். ஆகவே நீங்கள் ஏதாவது சாதனத்தில் ஈடுபடுவீர்களாக. பண்பாடு அடைந்த பிறகு சாதனத்தில் சிறிது முன்னேற்றம் அடைந்த பிறகு நீங்கள் ஒவ்வொருவரும் ஒரு ஜனக மகாராஜா ஆகலாம்.' கற்றவன் ஒருவன் அதி விரைவில் ஆங்கிலத்தில் எழுதுவதை நீர் பார்க்கின்றீர். ஆனால் ஆரம்பத்திலேயே அன்னவனுக்கு அத்தகைய திறமை வந்துவிடுமா? அப்படி வேகமாக எழுதுகிற மனிதன் ஒருவேளை ஏழைப் பெற்றோர்களுக்கு மகனாக வாய்த்திருக்கலாம். ஒரு குடும்பத்தில் அவன் சமையல்காரனாக இருந்திருக்கலாம். அப்படிப் பணிவிடை பண்ணி தன் உணவை அவன் தேடிக் கொண்டான். அதற்கிடையில் படாத பாடுபட்டுக் கல்வியையும் அவன் சிறிது பயின்று வந்தான். இப்படியெல்லாம் முயற்சி எடுத்துக் கொண்டதின் விளைவாகவே அவன் ஆங்கில மொழியை இப்போது விரைந்து எழுத வல்லவனாயிருக்கின்றான்.

"உலகத்தவன் ஒருவன் உலகப் பற்று என்னும் கொடிய நோயில் வருந்திக்கொண்டிருக்கிறான். ஏகாந்த வாசம் என்னும் முறையைக் கொண்டல்லாது இந்த நோயை அகற்றுவது எங்ஙனம்? தாகஜுரத்தில் ஒருவன் வருந்துகிறான். அவனுக்குப் பக்கத்தில் சில கூஜாக்களில் ஜலமும் இரண்டொரு ஜாடிகளில் ஊறுகாய் வகைகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. ஊறுகாய் என்று சொன்ன மாத்திரத்தில் சாதாரண மனிதனுக்கு நாவில் எச்சில் ஊறுகிறது. இனி தாக ஜுரக்காரன் இதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பானா? எந்த விதத்திலாவது ஜலம் பருகவும், ஊறுகாய் அருந்தவும் அவன் முயலுவான். ஒரு கூஜாவில் ஜலம் வைக்கப்பட்டிருக்கிறது. அந்த ஜலத்தை எடுத்துப் பருகாதிருப்பது அவனுக்குச் சாத்தியப்படுமா? காமநோயில் வருந்துகிற ஒருவன் பெண்பாலர்களுக்கிடையில் வாழுகிறான். அத்தகையவனுக்குக் காமநோயைக் களைய முடியுமா? அந்தந்த நோயைக் களைவதற்கேற்ற சூழ்நிலையை முதலில் அமைத்து வைப்பது அவசியம். காமமும் காசு ஆசையும் மனிதனை விடாது பிடித்து வாட்டுகிற நோய்களாகும். ஆத்ம சாதனங்கள் புரிகின்றவனுக்கே அந்நோயை அகற்ற இயலும். சாதனங்கள் புரிந்து மனதைப் பக்குவப்படுத்தியிருப்பவனுக்கு ஜனக மகாராஜா போன்று உலகில் பற்றற்று வாழ்ந்திருக்க முடியும். அரசமரம் ஒன்று சிறு செடியாய் இருக்கிறபொழுது அதற்கு வேலிகட்டிப் பாதுகாக்க வேண்டும். இல்லாவிட்டால் ஆடு மாடுகள் மிதித்து அதைப் பாழ்படுத்திவிடும். ஆனால் அது பெரிய மரமான பிறகு அதற்கு வேலி கட்டுதலில் பொருளில்லை. அந்த மரத்திலேயே யானை ஒன்றைக் கட்டி வைத்தாலும் அது அழிந்துபட்டுப் போகாது. அங்ஙனம் சாதனங்கள் புரிந்து மனதைப் பக்குவப்படுத்தியவன் உலக பந்த பாசங்களில் அகப்பட்டுக்கொள்ளமாட்டான்.

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது)

334. உள்ள துணரா வுணர்
விலிமா பாவியென்றே
மெள்ள மெள்ளக் கைநெகிழ
விட்டாய் பராபரமே.

கார்த்திகை மாதச் சக்கரத்தில் 407 ஆம் பக்கம் "மானுடன் ஒருவனிடத்து உலகப் பற்று எவ்வளவுக் கெவ்வளவு உள்ளத்தினுள் ஊறிக் கிடக்கிறதோ" என்று துவங்கி "அப்பொழுது பரத்தையடைய சாதகன் தகுதியுடையவனுகிறான் என்பது இக்கண்ணியினுடைய கருத்து"...... என்று முடிவுறுகிற வியாக்கியானம் முழுதும் இந்தக் கண்ணிக்கு விளக்கமாகிறது.

335. எல்லாம் நினது செயல்
என்றெண்ணும் எண்ணமும் நீ
அல்லால் எனக்குளதோ
ஐயா பராபரமே.

ஜீவாத்மன் ஒருவன் கீழ்நிலையிலிருந்து மேல் நிலைக்குப் போவதற்கு அவனே பொறுப்பாளியாகிறான். அவன் எடுத்துக்கொள்ளுகிற முயற்சிக்கு ஏற்றவாறு கீழ்மையும் மேன்மையும் அவனுக்கு வந்து அமைகின்றன. தான் அடைந்துள்ள நிலைமைக்குத் தானே பொறுப்பாளி என்னும் உணர்வு அவன் இன்னும் மேல்நிலைக்குப் போவதற்குத் தூண்டுகிறது. 'தானே தனக்குச் சுற்றமும் தானே தனக்கு விதிவகையும்' எனும் கோட்பாடு பரிணமித்து மேன்மை அடைந்து வருகிற ஜீவாத்மனுக்கு முற்றிலும் பொருத்தமானது.

மானுட நிலையை எட்டியுள்ள ஜீவாத்மன் அந்நிலையில் கணக்கற்ற பிறவிகளை எடுக்கிறான். அப்பிறவிகளில் இப்பிரபஞ்ச வாழ்க்கையைப்பற்றிய உண்மை சிறிது சிறிதாக அவனுக்கு விளங்குகிறது. இன்பம் துன்பம் ஆகிய இரண்டும் கலந்தது பிரபஞ்ச வாழ்க்கை. துன்பம் கலவாத இன்பத்தை மானுடன் பிரபஞ்சத்தில் தேடுகிறான். ஆனால் அது ஒரு நாளும் அகப்படாது.துன்பம் என்னும் விலைகொடுத்தே இன்பத்தை ஈண்டுப் பெறமுடியும். இந்த நிர்ப்பந்தத்தை முன்னிட்டு விவேகம் படைத்துள்ள மனிதனுக்குப் பிரபஞ்ச வாழ்க்கையில் பற்று குறைகிறது. ஆத்மசாதனத்தில் அவன் ஈடுபடுகிறான். ஆத்மசாதனம் ஓங்குவதற்கேற்ப பிரபஞ்சப்பற்றும் குறைந்து மறைந்து போகிறது.

அடுத்தபடியாகத் தனக்கும் தெய்வத்துக்கும் உள்ள இணக்கத்தை அவன் அறிய வருகிறான். தெய்வத்தின் அருளாலேயே தன்னுடைய வாழ்வு பெருவாழ்வாகப் பரிணமித்து வருகிறது என அவன் உணருகிறான்.மேல்நிலைக்குப் போகப்போக யான் எனது என்னும் செருக்கு பின்னணிக்குப் போகிறது. அவன் ஆட்டுவித்த பிரகாரம் நான் ஆடுகிறேன். பேசுவித்த பிரகாரம் நான் பேசுகிறேன் என்னும் பரபோதம் முன்னணியில் வந்து நிற்கிறது. அதற்கு மேல் ஒரு படி அவன் முன்னேறுகிறபொழுது நானாக வடிவெடுத்து வந்திருப்பதும் தானே என்னும் தெளிவு வருகிறது. கடைசியாக நான் என்னும் ஜீவவியக்தி அடியோடு மறைந்து போகிறது. கடலை எட்டுகிற நதி ஒன்றை இதற்குச் சான்றாகச் சொல்லலாம். கடலை அணுகுகின்றபொழுது கடலின் பாங்கு ஆகிய பொங்குதல் வடிதல் என்னும் செயல்கள் நதியினிடத்தும் காணலாம். கடலை அடைந்தான பிறகு நதியின் பாங்கு ஆகிய நல்ல நீர் சிறிதளவு அதனிடத்து இருக்கிறது.கடலுக்குள்ளே முற்றிலும் நுழைந்தான பிறகு நதியின் பாங்கை அது இழக்கிறது. கடலாக அது நிலைத்திருக்கிறது. அதே விதத்தில் ஜீவாத்மன் பரமாத்மாவில் லயமாகும் தருணத்தில் ஜீவபோதம் எப்படிப் பரபோதமாக மேலோங்குகிறது என்னும் கருத்து இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

336. பந்தமயக்கிருக்கப்
பற்றொழிந்தேன் என்றுளறும்
இந்த மயக்கம் எனக்கேன்
பராபரமே.

பந்த மயக்கு—பிரபஞ்சப் பற்று என்னும் அஞ்ஞான நிலை.

பற்றொழிதல்—பந்தம் அறவே நீங்குதல்.

உளறுதல்—பிதற்றுதல்.

பரதத்துவத்தைப் பகுத்தறிவால் அல்லது யுக்தியால் அறிந்துகொள்ளுதல் ஒருநிலை. அது பாராட்டுதற்குரியது. ஆனால் அது சுவானு

பூதியாக வடிவெடுக்க வேண்டும்.

சுவானுபூதியாக வடிவெடுக்குமிடத்தே மயக்கம் மறைந்துபட்டுப் போகிறது, ஜீவபோதம் அடிபட்டுப் போகிறது, பரபோதம் எஞ்சியிருக்கிறது. பள்ளியில் படித்து வருகிற மாணுக்கனெருவன் தலே மாணுக்கனுகத் திகழ்கிருன். படிப்பில் நிபுணனுக இருக்கிருன். பரீட்சையில் தேர்வு பெற்றுப் பள்ளியினின்று வெற்றிகரமாக அவன் வெளியேகுவது திண்ணம். ஆனல் பரீட்சையில் கேட்ட கேள்விகளுக்கு விடை எழுதுதற்கு முன்பே தன்னைப் பரீட்சையில் தேர்ந்து விட்டவனுகத் தன்னைப் பற்றி அவன் எண்ணிக் கொள்ளுவானுகில் அது மயக்கமாகும். அவனுக்கு அது ஒவ்வாது. அதே விதத்தில் ஆத்ம சாதகனெருவன் முறையாகச் சாதனங்கள் புரிந்து கொண்டிருப்பதற்கிடையில் தனக்குச் சுவானுபூதி வாய்த்து விட்டதாக எண்ணுவது ஒவ்வாது. அப்படி எண்ணுவதே மயக்கம். அந்த மயக்கத்தினின்று தெளிவு அடைவது குறிக்கோள். ஜீவபோதத்தை அறவே கலேத்துவிட்டால் ஜீவபோத ஒழிவும், பரபோத உதயமும் ஒருங்கே நிகழ்கின்றன. திருவருளை முன்னிட்டு அங்ஙனம் நிகழவேண்டிய அரிய பெரிய செயலை நிகழ்ந்து விட்டதாகக் கற்பனை பண்ணுவது பொருந்தாது என்பது இக்கண்ணியின் கருத்து.

337. காட்சி யெல்லாம் கண்ணேவிடக்
கண்டதுண்டோ யாதினுக்கும்
மாட்சி உன தருளே
அன்ருே பராபரமே.

மாட்சி - மகிமை. பஞ்ச பூதங்களால் ஆகிய பிரபஞ்சத்தின் அமைப்பைக் காண்பதற்குப் பஞ்சபூதங்களால் ஆகிய ஊனக்கண் உதவுகிறது. ஊனக்கண்கொண்டே இவ்வுலகின் நடைமுறைகளை நான் கண்டுவருகிறேன். அத்தகைய இப்பிரபஞ்சம் உன்னுடைய அருளால் வடிவெடுத்து இருக்கிறது. இதே பிரபஞ்சத்தின்கண் உன்னுடைய மகிமையும் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. அந்த மகிமையைக் காண்பது எல்லார்க்கும் சாத்தியமன்று. உன்னுடைய அருளுக்குப் பாத்திரமாகிறவர்களுக்கே உலகம் முழுவதையும் உன் மயமாகக் காண்பது சாத்தியமாகிறது. வெறும் ஊனக்கண்கொண்டு காண்பவருக்கு இப்பிரபஞ்சம் ஒரு பாங்கில் விளங்குகிறது. அது இன்பமும் துன்பமும் நிறைந்தது. போட்டிக்கும் பொருமைக்கும் அதில் வேண்டியவாறு இடமிருக்கிறது. எளிய உயிர் வகைகளை வலிய உயிர் வகைகள் அடக்கி ஆளுதலும், அடிமைப்படுத்துதலும், துன்புறுத்துதலும் துடைத்துத்தள்ளுதலும் சாத்தியமாகின்றன. அதே பிரபஞ்சத்தில் ஓர் உயிர் மற்ருேர் உயிரைப் பேணுதலும் பாராட்டுதலும் சாத்தியமாகின்றன. விதவிதமான காட்சிகளுக்கு இப்பிரபஞ்சம் இடம் தருகிறது. முரண்பாடுகளனைத்தும் இதில் நிறைந்திருக்கின்றன. இப்பிரபஞ்ச வாழ்க்கையில் அலுப்புத்தட்டுகிற யாரோ சிலர்தாம் உன் அருளை நாடுகின்றனர். அப்படி நாடுகின்ற எல்லார்க்கும் உன் அருள் வாய்ப்பதில்லை. அதற்கும் காரணமாயிருப்பது அன்னவர்களுடைய அரைகுறையான ஆத்ம பரிபாகமே யாம். மற்று ஆத்ம பரிபாகம் அடையப்பெற்று உன்னுடைய அருளையும் அடையப்பெற்றவர்களுடைய பாக்கியம் அலாதியானது. அப்படி அருளுக்குப் பாத்திரமானவர்கள் அணுமுதல் அண்டம் வரையில் உள்ள யாவையும் உன் மயமாகக் காண்கின்றனர். கோரக்காட்சி, அகோரக்காட்சி, கொடூரத்தன்மை, இரங்கிய மனப்பான்மை, பட்சபாதம் நேரான இணக்கம் ஆகிய முரண்பாடுகளெல்லாம் அடிபட்டுப் போகின்றன. உன்னுடைய ஆனந்தத் தாண்டவமே யாண்டும் மிளிர்கிறது. நலம் கேடு எனப்படுபவைகள் வேற்றுமைகளை இழந்து விடுகின்றன. உயர்ந்தவைகள் தாழ்ந்தவைகள் என்பன வித்தியாசமற்றுப் போகின்றன. கொலேபாதகம், போட்டி, பொருமை என்னும் கொடிய செயல்களெல்லாம் பொருளற்றவைகளாகப் போகின்றன. அவை யாவையும் உன் மயமாகக் காணுதலிலும் அவைகளின் செயல்களை எல்லாம் உன்னுடைய விளையாட்டாகக் காணுதலிலும் உருவெடுக்கிற பரமானந்தம் ஒப்பற்றது. ஆகவே உன்னை வழுத்தி உன்னிடத்தில் ஒன்றுபடுவதற்கு முன்பு இம் மாயப்பிரபஞ்சம் முழுவதையும் உன்னுடைய மகிமை வாய்ந்த திருவிளையாடல் என்னும் அருள்காட்சி காண்பவர்கள் பாக்கியவான்கள். அப்பெரியபேறு அடியேனுக்கும் வாய்ப்பதாகுக என்பது இக்கண்ணியின் கருத்து.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

நல்லார்களோடு இணக்கம் வைப்பது மட்டும் போதுமா? என்ற கேள்வி எழுகிறது. சிலர் நல்லார்களோடு இணக்கம் வைத்து முயற்சி இல்லாமல் இருந்தால் எல்லாம் வந்து வாய்த்துவிடும் என்று எண்ணுகின்றனர். அப்படி எண்ணுவது தவறு. தன் முயற்சியும் வேண்டும். மனதில் உள்ளதை மறைக்காது சான்றோர்களிடம் தெரிவிக்கவேண்டும். ஐயங்கள் ஏற்பட்டால் அவற்றைச் சான்றோரிடம் தெரிவித்து அவற்றைப் போக்கிக்கொள்ள வேண்டும். சான்றோர்களுடையவாழ்க்கையைக் கூர்ந்து கவனித்து அவருடைய வாழ்க்கையை நீயும் பின்பற்றவேண்டும். உண்கின்ற உணவு உனக்குப் பயன்பட வேண்டுமானால், அதை நீ ஜீரணம் செய்யவேண்டும். உனக்காக வேறொருவர் ஏற்று ஜீரணம் பண்ணமுடியாது. உன் வாழ்க்கை உயர்வடைய வேண்டுமென்றால், உயர்ந்த எண்ணத்திலும், உயர்ந்த செயலிலும் நீ ஈடுபடவேண்டும். உயர்ந்தவர்களோடு சேர்ந்து ஒரு செயலும் செய்யாமல் இருப்பாயானால் நீ உயர்வடைய முடியாது. சான்றோர்களுடன் இணக்கம் வைப்பதோடு தீவிரமான சாதனையிலும் நீ ஈடுபட வேண்டும். சான்றோர்களுக்கு அருகில் இருக்கும் பொழுது உனக்கு ஐயங்கள் அகன்று விடுகின்றன. அவர்களுக்கு அருகில் நீ வாழ்ந்து வரும்பொழுது உன் உள்ளத்தில் தூய எண்ணங்கள் எழுந்துகொண்டிருக்கும். எரிகின்ற நெருப்பில் போடுகின்ற விறகுக் கட்டை நெருப்புமயமாவது போன்று சான்றோர்களுடைய இணக்கம் உன்னைச் சான்றோன் மயமாக மாற்றி அமைக்கிறது. வெறும் சாஸ்திரங்களையும் ஆத்மீக நூல்களையும் படிப்பதினால் மட்டும் உன் வாழ்க்கை உயர்ந்துவிடாது. ஞானிகளோடு இணக்கம் வைத்து ஞான வாழ்க்கை வாழ்கின்றபோதுதான் உன் உள்ளம் தூயதாக மாறி ஞான ஒளி பெறுகிறது.

சிறிதுநாளைக்காவது தனிமையிலிருந்து பழக வேண்டும். தனிமையில் உன் உள்ளத்தின் இயல்பை நீ அறிந்துகொள்ளலாம். தனிமையிலிருக்கும் பொழுதுதான் பலவித எண்ணங்கள் உன் உள்ளத்தில் எழும். மனம் பரிபாகம் அடைவதற்கு முன்பு நீ தனிமையில் பலநாட்களுக்கு இருக்கக்கூடாது. ஆத்மீக வாழ்வில் நீ முன்னேற்றம்அடைந்துவருகிறபொழுது இடையிடையே நீ தனிமையில் இருந்து பழகுவது அவசியம். காலதேசவர்த்தமானத்தில்கட்டுண்டு இருக்கின்ற ஒருவன் காலதேச வர்த்தமானத்தைக் கடந்த நிலையிலிருக்கும் அதீத நிலையை அனுபவிப்பது இயலாது. கால தேச வர்த்தமானத்திற்கப்பால் பரம்பொருள் இருக்கிறார். பரம்பொருள்ஒருவரே தனிப்பொருளாக இருக்கிறார். அப் பரம்பொருளிடத்தில் மனம் லயித்திருப்பதே தனிமைக்குப் பொருளாகும். அந்த நிலையை நீ சாதனத்தின் ஆரம்பத்திலிருக்கும் பொழுது அடைய முடியாது. சாதனையின் ஆரம்பத்தில் சாதுக்களுக்கிடையே வாழ்ந்து வருவதுதான் நல்லது. ஆரம்ப சாதகர்களுக்குச் சத்சங்கம் மிகவும்இன்றியமையாதது.

சாதனையை இடைவிடாது நீ செய்துகொண்டிரு. கடவுள் காட்சி கிட்டவில்லையே என்று மனத்தளர்ச்சிக்கு இடம் கொடுக்காதே. சாதனை செய்வதற்கிடையில் பொறுமையுடன் காத்திரு. சிலர் உடனுக்குடன் பலன் கிட்டவேண்டுமென்று எண்ணுவார்கள். அப்படிப் பலன் கிட்டாவிட்டால் மனத்தளர்வுக்கு இடம் கொடுத்துவிடுவார்கள். அது பொருந்தாது. மன உறுதியோடு தீவிரமாகச் சாதனை புரிந்து வா. கடவுள் காட்சி பெறவேண்டுமென்ற ஆவல் நாளுக்கு நாள் அதிகரித்து வரவேண்டும். உணர்ச்சி வசப்பட்டு உணர்ச்சியை வெளிப்படுத்துகின்ற பாங்கில் நடந்து கொள்ளாதே. ஆத்மீக உணர்ச்சிகளை வெளிப்படுத்தாது உள்ளுக்குள்ளேயே அடக்கிவைப்பதின் மூலம் நீ அவற்றை வலுப்படுத்த வேண்டும். அவற்றை நீ வெளிப்படுத்திவிடுவாயாகில் அவை வெளியானதும் உன் உள்ளம் ஆத்மீக உணர்ச்சி அற்றதாகப் போய்விடும். ஆகையால் ஆத்மீக உணர்ச்சிகளை உன் உள்ளத்திற்குள்ளேயே கட்டுப்படுத்தி வைக்கப் பழகு.

உண்மையான பக்திமான் கடவுளைப் பெற வேண்டும் என்று தீவிர ஆவலுடையவனாக

இருப்பான். அவன் ஒருபொழுதும் பொறுமையை இழந்து விடுவது இல்லை. கடவுள் காட்சி கிட்டாவிட்டாலும் கடவுள் மீது பக்தி செலுத்துவதை அவன் நிறுத்துவதில்லை. பக்திக்காகவே அவன் பக்தி பண்ணுகின்றான். வியாபார புத்தியுடைய பக்தர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்கு இதுவேண்டும் அதுவேண்டுமென்று கடவுளிடம் பிரார்த்தனை செய்வார்கள். அப் பிரார்த்தனைக்கு உடனே பலன் கிடைக்காவிட்டால் அவர்கள் பக்திசெய்வதை நிறுத்திவிடுவார்கள். இன்னும் சிலர் கடவுள் தங்களுக்கு இன்னது செய்தால் தாங்கள் கடவுளுக்குக் காணிக்கை செலுத்துவதாகப் பேரம் பேசுவார்கள். அவர்களும் உண்மையான பக்தர்கள் அல்லர். மனம் தூயதாகும் பொழுது அது உண்மையாகவே கடவுளிடத்தில் பக்தி கொள்ளும். உண்மையான பக்தி பெறுவதற்கு இடைவிடாது சாதனை செய்.

இடைவிடாது சாதனை செய்து உன் மனதைத் தூய்மைப் படுத்துவதிலும், சான்றோர்களிடம் இணக்கம் வைப்பதிலும் நீ நாட்டம் கொண்டிரு. அப்பொழுது உன் உள்ளத்தில் கடவுள் நாட்டம் உண்டாகும். உலக விஷயங்கள் உன் உள்ளத்தை அலைக்கழித்துக் கொண்டேயிருக்கும். உன் உள்ளம் உலக விஷயங்களை விட்டு விலகித் தெய்வீக விஷயங்களை ஏற்குமானால் உன் உள்ளத்தில் சாந்தி உண்டாகும். உலகப் பற்றுடையவர்களுடைய உள்ளம் உலகப் பொருள்களைப் பெறுவதில் தீவிர நாட்டமுடையதாக இருக்கிறது. உன் உள்ளம் கடவுளைப் பெறுவதில் அத்தகைய நாட்டமுடையதாக இருக்கவேண்டும். தீவிர கடவுள் நாட்டமுடைய மனது "உன்னை மறந்தால் நான் உயிர் வாழேன்" என்ற நிலையை உடையதாக இருக்கிறது. இத்தகைய அருள் நாட்டமுடைய மனதுக்குச் சாந்தி அல்லது அமைதி உண்டாகிறது. உலக விஷயங்கள் மனதுக்கு ஒருநாளும் சாந்தி அளிப்பதில்லை. இவ்வுண்மையை மனிதன் அறிந்து கொள்வதற்குப் பல ஜன்மங்கள் எடுக்கின்றான். உலக விஷயங்களில் இன்பம் காண்பதில் மனது தீவிரமாக இருக்குமானால் உலகக் கவர்ச்சி இருந்துகொண்டேயிருக்கும். உலக இன்பத்தில் மனதிற்கு வெறுப்பு உண்டாகும்பொழுது தான் அது கடவுள்பால் இழுக்கப்படுகிறது. உலகம் அநித்தியம் என்பதும் உலக இன்பம் பொருளற்றதென்பதும் மனதுக்கு விளங்குகின்றவளவுதான் கடவுள் நாட்டம் தீவிரமுடையதாகிறது. அருள்நாட்டம் அதிகரிக்கின்ற அளவு உன் உள்ளத்தில் சாந்தமும் அமைதியும் நிலைத்து நிற்கும்.

கடவுள் பக்தியை வளர்த்து வா. பிரார்த்தனை, தியானம், ஆத்ம சாதனை முதலியவற்றை முறையாகச் செய்து வா. நீ இல்லறத்திலிருந்தாலும் சரி, துறவறத்திலிருந்தாலும் சரி கடவுள் பக்தியை உள்ளத்தில் வளர்த்து வரவேண்டும். துறவற நெறியிலிருப்பவனுக்கு மனதைக் கடவுள்பால் திருப்புவதற்கு அனுகூலமான சூழ்நிலையிருக்கும். இல்லற நெறியிலிருப்பவனுக்கு மனதைக் கடவுள்பால் திருப்புவதற்குப் பிரதிகூலமான சூழ்நிலையிருக்கும். அப்பிரதிகூலமான சூழ்நிலையை வெல்லுவதற்கு அவன் வெகுவாக முயல வேண்டும். உலகப் பற்று குறைந்து தெய்வப்பற்று அதிகரிப்பதை வைராக்கியம் என்கின்றோம். ஒருவன் உள்ளத்தில் வைராக்கியம் உண்டாகுமானால் உலக பந்தத்திலிருந்து விடுபடுவதற்குத் தவித்துக் கொண்டிருப்பான். வலையில் அகப்பட்ட மீன் தப்பித்துக் கொள்வதில் மகிழ்ச்சி அடைவது போன்று குடும்ப பந்தத்திலிருந்து தப்பித்துக் கொண்டு போவதில் வைராக்கியமுடையவன் மகிழ்ச்சி அடைகின்றான். வைராக்கியம் அல்லது பற்றற்ற நிலை துறவற நெறிக்கு அவசியம். புறத்துறவு அகத்துறவுக்குத் துணைபுரிய வேண்டும். அகத்துறவு அருள்நாட்டத்தை வளர்க்கிறது. அகத்துறவு, புறத்துறவு ஆகிய இரண்டும் துறவு மார்க்கத்திலிருப்பவனிடம் இருக்கவேண்டும். அவன் முற்றிலும் கடவுளையே சார்ந்திருந்து பழகுதல் வேண்டும். இல்லறத்திலிருப்பவன் தனக்குச் சொந்தமான அனைத்தையும் மனதால் தன்னுடையதல்ல என்று உணரவேண்டும். தன் குடும்பமே கடவுளுடையதென்று அவன் கருதவேண்டும். தன்னைக் கடவுளுடைய தொண்டனாகக் கருதி தன்னுடைய உடைமைகளையெல்லாம் கடவுளுடைய உடைமைகளாக எண்ணித் தனக்கமைந்த கடமைகளைக் கடவுள் தொண்டாகச் செய்து வரவேண்டும்.

# என் குருநாதர்

(சுவாமி விவேகானந்தர் நியூயார்க் நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[411ஆம் பக்கத் தொடர்ச்சி]

என் குருநாதர் மக்களுக்குச் செய்த உபதேசம் தொடர்ந்து நிகழ்ந்து வந்தது. அவர் சரீரம் நீண்ட நாளைக்கு இனி உலகில் இருக்காது என்ற செய்தி எங்கும் பரவியது. மக்கள் பெருங்கூட்டம் கூட்டமாக அவரைப் பார்க்க வந்து கூடினர். இந்தியாவில் இத்தகைய மதபோதகர்களிடம் ஜனங்கள் எப்படி வந்து கூடுகிறார்கள் என்பதையும் அவர் வாழ்ந்திருக்கும்போதே அவரை எப்படிக் கடவுளாகப் போற்றுகிறார்கள் என்பதையும் நீங்கள் கற்பனைகூட பண்ண முடியாது. அவரது ஆடையின் விளிம்பைத் தொடுவதற்கு ஆயிரக்கணக்கான மக்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். இங்ஙனம் மற்றவர்களிடமுள்ள தெய்வத்தன்மையைப் போற்றுவதன் மூலம் தங்களிடம் தெய்வத்தன்மையைத் தோற்றுவிக்கிறார்கள். மனிதன் எதைப் போற்றுகின்றானோ அல்லது விரும்புகின்றானோ அதை அடைகின்றான். இவ்வுண்மை எல்லார்க்கும் பொருந்தும். நீங்கள் இந்தியாவிற்குப் போய் அரசியலைப்பற்றிப் பேசுவீர்களாயின் உங்கள் பேச்சு எவ்வளவு சிறப்புடையதாயினும் அதைக் கேட்க வரும் மக்கள் கூட்டம் குறைவாகத்தான் இருக்கும். ஆனால் மதத்தைப்பற்றிப் பேசுவீர்களானால் மக்கள் கூட்டம் உங்களைச் சூழ்ந்து கொள்ளும். சமய வாழ்வு வாழத் தொடங்கி விடுவீர்களானால் உங்களைக் காண்பதற்கும் உங்கள் பாதங்களைத் தொட்டு வணங்குவதற்கும் நூற்றுக்கணக்கான மக்கள் வருவார்கள். புனிதம் நிறைந்த மகான் ஒருவர் தங்களை விட்டுச் சிக்கிரம் மறைந்து விடுவார் என்று கேள்விப்படுவார்களானால் அவரிடம் ஏராளமான மக்கள் வரத்தொடங்கி விடுவார்கள். என் குருநாதர் உடல்நிலை பாதிக்கப்பட்ட பொழுதிலும் அதைப் பற்றிச் சிறிதும் கவலைப் படாது மக்களுக்கு ஓயாது மதபோதனை செய்து கொண்டேயிருந்தார். அவரை அச்செயலிலிருந்து தடுத்து நிறுத்துவதற்கு எங்களாலும் இயலவில்லை. அநேக மக்கள் வெகுதூரத்திற்கப்பால் இருந்து வந்தார்கள். அவர்களுடைய கேள்விகளுக்கெல்லாம் மறுமொழி பகராது அவர் உறங்கச் செல்லமாட்டார். "எனக்குச் சக்தி இருக்கும் வரையிலும் நான் மக்களுக்குப் போதனை செய்து தீருவேன்" என்று அவர் கூறுவார். அவர் சொல்லுக்கேற்ற நடத்தையும் உடையவராக இருந்தார். ஒருநாள் தான் சரீரத்தை விடப்போகும் தேதியைக் குறித்து எங்களிடம் கூறினர். அவர் கூறியபடியே அன்று வேத மந்திரம் ஒன்றை உச்சரித்துக் கொண்டே சமாதிநிலை அடைந்து விட்டார்.

அவருடைய கருத்துக்களையும், அவர் உலகுக்குக் கொண்டுவந்த செய்திகளையும் அறிந்து உலகுக்கு எடுத்துச் சொல்பவர்கள் மிகச் சிலரே இருந்தனர். அவரைப் பின்பற்றியவர்கள் பலர் இருந்தனர். அவர்களுக்குள் சிலர் உலகைத் துறந்து அவருடைய பணியைச் செய்வதற்கு ஆயத்தமான இளைஞர்களாக இருந்தனர். அவர்கள் மூலம் அவருடைய பணி துவங்கியது. அவர்களை அழிப்பதற்குப் பல எதிர்ப்புச் சக்திகள் தோன்றின. ஆனால் அவர்கள் அவற்றை யெல்லாம் உறுதியுடன் எதிர்த்து நின்றார்கள். பெருவாழ்வு தங்களுக்கு அமையப் போவதை அவர்கள் முற்றும் உணர்ந்திருந்தார்கள். பல ஆண்டுகள் புனிதவாழ்வு வாழ்ந்தமையால் மன உறுதியோடு அவர்கள் இருந்தார்கள். துறவிகளாக இருந்த அவ்விளைஞர்கள் பெரிய குடும்பத்திலிருந்து வந்தவர்கள். தாங்கள் பிறந்த ஊரிலேயே தெருவில் சென்று பிச்சை எடுக்கவும் செய்தார்கள். ஆரம்பத்தில் அவர்களுக்கு எதிர்ப்புச் சக்தி அதிகம் இருந்தது. அவர்கள் விடாமுயற்சியினால் தங்கள் குருநாதரின் செய்தியைப் பரப்புவதில் நாளுக்குநாள் தீவிரமாக இருந்தனர். நாடுமுழுவதும் குருநாதருடைய கொள்கை பரவுவதற்குத் தீவிரமாக முயன்றனர். என் குருநாதர் வங்காள தேசத்தில் சிறு கிராமத்தில் பிறந்தவர். அவர் கல்வி கற்க மறுத்து விட்டார். தூய வாழ்வின் மூலமாகவும், தவத்தின் மூலமாகவும் உண்மையை அறிந்து மற்ற

வர்களுக்குப் புகட்டினர். அவ்வுண்மை நிலவுவதற்காகச் சில இளைஞர்களையும் ஆயத்தப் படுத்திவிட்டுச் சென்றார்.

இன்றைக்கு இந்தியா முழுவதும் கோடிக் கணக்கான மக்கள் அவரை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்ற பெயரால் அறிந்திருக்கின்றனர். இந்தியாவில் மட்டுமன்றி இந்தியாவுக்கு அப்பாலும் அவரது ஆத்ம சக்தி சென்றிருக்கிறது. சத்தியத்தைப்பற்றியோ ஆத்மீகத்தைப்பற்றியோ உலகத்தில் நான் எங்காவது பேசுவேனேயானல் அந்தக் கருத்து என் குருநாதருக்குரியதாகும். என் பேச்சில் ஏதாவது தவறு இருப்பின் அது என்னுடையது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் இன்றைய உலகுக்கு அளித்துள்ள செய்தியாவது: "கொள்கைகளையும், கோட்பாடுகளையும், சம்பிரதாயங்களையும், மதப்பிரிவுகளையும், கோவில்களையும் பற்றிக் கவலைப்படாதீர்கள். மனிதனிடத்தில் தெய்வத்தன்மை இருக்கிறது. அதோடு மற்றெதையும் ஒப்பிட முடியாது. மனிதனிடமிருக்கும் தெய்வத்தன்மை அவனிடம் அதிகரிக்கின்ற அளவு அவன் நல்லது செய்வதற்குச் சக்தியுடையவன் ஆகின்றான். முதலில் அத்தெய்வத்தன்மையைப் பெறுங்கள். அதற்காகப் பாடுபடுங்கள். யாரையும் குறை கூருதீர்கள். எல்லாக் கொள்கைகளிலும், கோட்பாடுகளிலும், சிறிதாவது நலன் இருக்கிறது. வார்த்தையோ, பெயரோ, மதப்பிரிவோ சமயம் ஆகா. சமயம் அனுபூதியாகும் என்பதை உங்கள் வாழ்க்கையின் மூலம் காட்டுங்கள். அனுபூதியடைந்தவர்கள்தாம் மத உண்மையை அறிந்தவர்கள் ஆகிறார்கள். அனுபூதிமான்கள் மதத்தை மற்றவர்களுக்குத் தரமுடியும். அவர்கள்தாம் மத போதகர்கள் ஆகிறார்கள். அவர்களே ஞான ஒளி பெற்றவர்கள் ஆகிறார்கள்."

இத்தகைய ஞானிகள் ஒரு தேசத்தில் தோன்றுகின்ற அளவு அத்தேசம் உயர் நிலையை அடைகிறது. அத்தகைய ஞானிகளில்லாத தேசம் இருள் மூடிக்கிடக்கிறது. அந்தத் தேசத்தை எதுவும் காப்பாற்ற முடியாது. ஆகையால் என்னுடைய குருநாதர் "உங்களைத் தெய்வத் தன்மையுடையவர்களாக்கி உண்மையைத் தரிசிப்பீர்களாக" என்று உலக மக்களுக்குப் போதித்திருக்கிறார். உங்களுடைய சகோதரர்களுக்கு நலம் செய்வதில் உங்களைக் கொடுத்துவிடுங்கள். அன்பைப்பற்றிப் பேசுகின்ற பேச்சை நிறுத்திவிட்டு அன்பைச் செயலுக்குக் கொண்டு வருவதற்குப் பாடுபடுங்கள். அனுபூதி பெறுவதற்கும், தியாகத்திற்கும் உரிய காலம் வந்துவிட்டது. தியாகத்தின் மூலமாகவும், அனுபூதியின் மூலமாகவும்தான் உலகத்திலுள்ள மதங்களுக்கிடையே ஒற்றுமை இருப்பதைக் காண்பீர்கள். வாய்ச்சண்டை அவசியமில்லை என்பதை அறிந்து கொள்ளுங்கள். மானிட சமுதாயத்திற்கு உதவி செய்ய ஆயத்தமாய் இருங்கள். மதங்களுக்கிடையே இருக்கும் அடிப்படை ஐக்கியத்தைப் பறை சாற்றுவதே என்னுடைய குருநாதருடைய செயலாக இருந்தது. மதபோதகர்கள் தங்கள் பெயரால் மதங்களை உண்டு பண்ணினர்கள். ஆனல் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய மாபெரும் மதபோதகராகிய என் குருநாதர் தம்மைப்பற்றி ஒன்றும் பேசவில்லை. எந்த மதத்தையும் அவர் குறை கூறவில்லை. எல்லா மதங்களும் ஒன்றினுடைய அம்சங்கள் என்பதை அனுபூதி வாயிலாக அறிந்திருந்தமையால் எம்மதத்தையும் அவர் தாக்கிப் பேசவில்லை. சமயத்தின் பெயரால் சகோதர மனப்பான்மையை வளர்க்கவும் சமயத்தின் பெயரால் எழும் துவேஷத்தைப் போக்கவும் சமயங்களுக்கிடையே சமரசம் கண்டார். தியாகமும் தூய்மையுமே சமயமாகும் என்பதை அவர் தெளிவுபட விளக்கினர். (முற்றும்)

---

"ஜகன் மாதாவே! மனிதர்களிடமிருந்து நான் யாதொரு கௌரவத்தையும் விரும்பவில்லை. இந்திரிய சுகங்கள் ஒன்றும் எனக்கு வேண்டாம். கங்கையும் யமுனையும் இரண்டறக் கலப்பதுபோல எனது ஆத்மாவானது உன்னிடம் வந்து புகும்படி மட்டும் கிருபை புரிவாயாக. தாயே! என்னிடம் பக்தியுமில்லை, யோகமுமில்லை; எனக்குச் செல்வமுமில்லை. எனது மனம் உன் பாதகமலங்களில் நித்தியவாசம் பண்ணக் கிருபை புரிவாய்."

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

# தெளிந்த உள்ளமும் மெய்ப்பொருள் காட்சியும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ *416*ஆம் பக்கத் தொடர்ச்சி ]

உபநிஷதம் பாரமார்த்திக விஷயத்தைப் பற்றிச் சொல்லிய பிறகு சாந்தி, சாந்தி, சாந்தி என்று முடியும். சாந்தி பாடம் என்று அதை அழைப்பர். பாரமார்த்திக விஷயத்தைக் கேட்டு உணர்ந்ததும் மனதில் சாந்தி உண்டாகிறது. நம்முடைய யதார்த்தநிலை சாந்தம் ஆகும். நம்முடைய யதார்த்தநிலைக்கு உபநிஷதம் நம்மை எடுத்துச் செல்லுகிறது. சாந்தத்தைப்பற்றி தியானம் பண்ணுவது ஆத்ம சொருபத்தைப்பற்றி தியானம் பண்ணியதற்கு நிகராகிறது. ஆத்ம தியானம் மனத்தெளிவை உண்டு பண்ணுகிறது. மனத்தெளிவு மூலம் மெய்ப்பொருள் காட்சி ஏற்படுகிறது.

பரவஸ்துவைப் பிரபஞ்சமயமாக விளக்குவதற்கு வேதங்கள் முயன்றன. உபநிஷதங்கள் பரவஸ்துவை நேரே விளக்குகின்றன. சமயச் சடங்குகள் தத்துவங்களை விளக்குகின்றன. வைகுண்ட ஏகாதசியின் போது நிகழும் விழாவில் ஸ்ரீரங்கத்தில் ஒரு அற்புதமான தத்துவம் விளக்கப்படுகிறது. ஸ்ரீரங்கநாதர் ஊர்வலமாகப் புறப்படுகிறபொழுது ஸ்ரீரங்கநாதருக்கு முன்பு பிரபந்தம் பாடிக்கொண்டு போவார்கள். அவர்களைப் பின்பற்றி ஸ்ரீரங்கநாதர் போவார். ஸ்ரீரங்கநாதருக்குப் பிறகு நான்கு வேதங்களையும் ஓதிக்கொண்டு போவார்கள். இந்த நிகழ்ச்சியின் கருத்து சிந்திக்கத்தக்கது. பிரபந்தம் பரவஸ்துவை நேரே விளக்குகிறது. அதைக்கேட்டு ஸ்ரீரங்கநாதர் அதன் பின் செல்கின்றார். அவரைத் தேடிக்கொண்டு வேதம் செல்கிறது. பிரபந்தத்தை வேதாந்தம் என்று வைத்துக் கொள்ளலாம். நாம் பக்குவமாகி வரவர வேதத்தின் விளக்கமும் வேதாந்தத்தின் விளக்கமும் நமக்குப் பிடிபடுகின்றன. அந்தக்கரண சுத்தி அடையாதபொழுது வேதமும் வேதாந்தமும் நமக்குப் பிடிபடுவதில்லை. அந்தக்கரண சுத்தி அடையாதவர்களுக்கு வேதத்தின் பொருள் மறைந்து கிடக்கிறது. ஆகையால் வேதத்துக்கே 'மறை' என்ற பெயர் வந்தது. பழத்தின் மேல்தோலைப் பார்த்துப் பழம் நல்லதா, அல்லது கெட்டதா என்று அறிந்து கொண்டு விடுகிறோம். பழத்தின் மேல் தோலுக்கு நிகர் வேதம் ஆகிறது. பழத்தின் சுளைக்கு நிகர் வேதாந்தம் ஆகிறது. வேதத்தினுடைய அந்தம் வேதாந்தம் எனப்படுகிறது. வேதாந்தம் உள்ளத்தின் வேட்கையை ஒழிப்பதால், வேதாந்தம் கேட்பவருடைய உள்ளம் தெளிவடைகிறது. தெளிந்த உள்ளத்தில் ஆத்ம சொருபம் அல்லது மெய்ப்பொருள் தெற்றென விளங்குகிறது.

பிரளயகாலம் வரும்பொழுது சூரிய வெளிச்சம் சந்திர வெளிச்சம் ஒடுங்கிப் போய்விடுகின்றன. ஆத்மப் பிரகாசம் ஒடுங்குவதில்லை. அமாவாசையன்று சந்திர வெளிச்சமிருப்பதில்லை. சூரியனை நாட்கணக்காக மேகம் மூடிக் கொண்டிருந்தாலும் அதன் பிரகாசம் போய் விடுவதில்லை. ஜடப்பொருளாக விளங்குகின்றவைகளுள் சூரியப் பிரகாசம் மூலப்பிரகாசம் ஆகிறது. சூரியனிடத்திலிருந்து கடன் வாங்கிய வெளிச்சத்தில் சந்திரன் ஒளிர்கிறது. பிரபஞ்சநிலையில் சூரியன் கிட்டத்தட்ட பரவஸ்துவுக்கு விளக்கமாகிறது. ஆகையால் சூரியனை சூரிய நாராயணனாக வைத்து வழிபடுகின்றோம். சூரியன் மூலமாகப் பரத்தை அறியலாம். சூரியன் ஒருநாளும் மங்கிப் போவதில்லை. இருள் எப்படி இருக்கிறதென்று பார்ப்பதற்கு சூரியன் புறப்பட்டுப் போனால் அதனால் இருளைக்காண முடியுமா? சூரியன் போகின்ற இடமெல்லாம் சூரியப் பிரகாசம் மற்றவற்றைப் பிரகாசமாக்கி விடுகிறது. சூரியனிடத்திலுள்ள பிரியாத பிரகாசம் போன்று நீ உன்னுடைய சொருபத்தை விட்டு ஒரு நாளும் பிரிந்திருப்பதில்லை. நீ சொருப மயமாக யாண்டும் இருக்கின்றாய். ஆனால் நீ சொருபத்தை மறந்ததாகக் கற்பனை செய்து கொண்டிருக்கிறாய். அந்தக் கற்பனையை ஒதுக்கித் தள்ளி விட்டு உன் சொருபத்தைத் தியானம் செய். நீ சொருபமயமாக இருப்பது அப்பொழுது உனக்கு விளங்கும். சொருபத்தை உணர உணர உன் உள்ளம் ஒளி பொருந்தியது ஆகிறது.

பரவஸ்து அகண்ட நிலையில் இருக்கிறது. அது அருளுக்குப் பிறப்பிடமாகிறது. அருள் என்றால் என்ன என்பதை ஆராய்வோம். ஜீவர்களெல்லாம் பரவஸ்துவை எட்டுவதற்கு முயல்கின்றன. பிரபஞ்சத்தின் அமைப்பு ஜீவர்களுக்குப் பரவஸ்துவை எட்டுவதற்கு உதவுகிறது. பிரபஞ்சத்தின் அமைப்பை அருள் என்று சொல்லுகிறோம். பிரபஞ்சத்தைச் சரியாக அறியுமிடத்து அவ்வறிவு பரத்தின்கண் நம்மை எடுத்துச் செல்லுகிறது. பிரபஞ்சம் தங்களுக்கு வழிகாட்டுதற்கு ஏற்ற பொருத்தமான சூழ்நிலையாக இருப்பதை ஞானிகள் உணர்கின்றார்கள். பரம்பொருளின் அருளால் மெய்ப்பொருள் காட்சியை நாம் பெற்றால் நாம் நல்ல சாதகர்களாகின்றோம். பரத்துக்கு அன்னியமாகப் பிரபஞ்சத்தைக் காண்கின்ற பொழுது அது மருட்காட்சி ஆகிறது. மருள் என்பது அருளுக்கு எதிரிடையானது. சிலர் சாமியாடுவதை மருள் வந்துவிட்டது என்பார்கள். அது உண்மையில் மருள் நிலைதான். மருள் வந்த நிலையில் அவர்கள் தங்களையும் பிரபஞ்சத்தையும் மறந்து மயங்கிய நிலையில் இருக்கிறார்கள். அவர்களுடைய நிலை தெளிந்த நிலை அன்று. அதை மனதைப் பிடித்த ஒரு நோயென்று பகரலாம். மனம் தெளிவடைகின்றபொழுது மருளுக்கு இடமில்லை. தெளிந்த மனதில் அருள் உண்டாகிறது. பரத்தை அடைவதற்கான பொருத்தமான சூழ்நிலையாக ரிஷிகள் பிரபஞ்சத்தைக் கருதினார்கள். அது அவர்களுடைய அருள் நிலையாகிறது ஸ்ரீ ராமகிருஷ்ணர் அத்தகைய அருள் நிலையில் வாழ்ந்தார். பிரகிருதித்தாய் பரத்தை அடைதற்கான எல்லா விதமான அனுகூலங்களையும் அமைத்துத் தந்து கொண்டிருக்கிறாள் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் உணர்ந்தார். அந்த மனநிலையை நாமும் வரவழைத்துக் கொண்டால் உலகில் வாழ்ந்திருப்பது நமக்குப் பெரிய வாய்ப்பாகிறது. அப்பொழுது நம்மைப் பக்குவப்படுத்திப் பரத்தின்பால் நாம் சென்று கொண்டிருக்கிறோம். பரம்பொருள் அருள் மயமாக இருக்கிறார் என்பதைச் சான்று கொண்டு விளக்குவோம் கரும்புதித்திக்கும். கரும்பைக் கசக்கிச் சாறுகப் பிழிந்தால் கருப்பஞ்சாறு தித்திக்கும். கருப்பஞ் சாற்றைப் பாகாகக் காய்ச்சினால் அந்தப் பாகு தித்திக்கும். அப்பாகை வெல்லமாகச் செய்தால் அவ்வெல்லம் தித்திக்கும். பாகைச் சுத்தி செய்து சர்க்கரையாகச் செய்தால் அச்சர்க்கரை தித்திக்கும். மேலும் அதைச் சுத்திசெய்து கற்கண்டாகச் செய்தால் கற்கண்டு தித்திக்கும். கரும்பு எல்லா நிலைகளிலும் தித்திப்புடையதாக இருக்கிறது. கடவுள் எல்லா நிலைகளிலும் அருள் மயம் உடையவராக இருக்கின்றார். பிரபஞ்சமும் அருள் மயம் என்பதை சான்றோர்கள் அறிகிறார்கள். தூய தெளிந்த மனது இவ்வருள் நிலையைப் பெறுகிறது. அருள் நிலையில் மெய்ப்பொருள் காட்சியைத் தவிர வேறொன்றுமில்லை.

இறைவன் அருள் பெற்றவர்களுக்கு இறைவனுடைய அருள் விளையாட்டு விளங்குகிறது. பிரஹலாதன் இறைவன் அருள் பெற்றவன். இரண்யகசிபு பிரஹலாதனைக் கொல்வதற்குப் பலவித உபாயங்களைக் கையாளுகிறான். பிரஹலாதனைக் கொல்ல இரண்யகசிபு எடுத்துக் கொண்ட முயற்சிகளெல்லாம் இறைவனுடைய விளையாட்டாகப் பிரஹலாதன் கருதுகின்றான். பக்தனுக்குக் கேடு செய்ய முடியாது. பக்தன் அனைத்தையும் இறைவன் அருளாகக்கொள்கிறான். பக்தனுக்கு எது வந்தாலும் அதைத் தன் பேரியல்பை வளர்ப்பதற்குப் பயன்படுத்துகின்றான். "நீ பெரும் துன்பத்துக்கு ஆளாகப் போகின்றாய்" என்று அப்பர் சுவாமிகளிடம் சொன்னார்கள். "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" என்று அவர் பதில் கூறினர். தங்களுக்கு வருகிற தீங்கைப் பகவான் தங்களோடு விளையாடுவதாகப் பக்தர்கள் உணர்கிறார்கள். பகவானுடைய அருளை உணர்வதற்குத் தெளிந்த உள்ளம் அவசியம்.

கடத்துக்குள் உள்ள ஆகாசத்தைக் கடாகாசம் என்கின்றோம். கடாகாசம் நாம் சிருஷ்டி பண்ணியதன்று. கடத்தைச் சிருஷ்டித்தோம். ஆகாசத்தைச் சிருஷ்டிக்கவில்லை. கடத்தை உடைத்துவிடுகின்றோம். அதனால் ஆகாசம் அழிவதில்லை. ஆகாசம் யாண்டும் இருந்தபடி இருக்கிறது. உடல் பிறந்து இருந்து மறைகிறது. ஆத்ம சொரூபம் என்றைக்கும் பிறப்பதுமில்லை; இறப்பதுமில்லை. நாம் ஆத்ம சொரூபம். ஆகையால் நாம் அழிபவர்கள்

அல்லர். ஆத்மாவுக்கு அழிவு இல்லை. ஆனல் உடம்புக்கு அழிவு உண்டு. உடம்பை நாம் என்று கருதி நாம் ஏமாற்றமடைகின்றோம். ஆத்மசொரூபம் நாம் என்று எண்ணி பிறப்பு இறப்பை மறந்து ஆத்மதிருப்தி உடையவர்களாக இருந்து பழகுவது சிறந்த ஆத்மசாதனம் ஆகிறது. சொல்லுதற்கரிய பொருளை நமக்கு விளங்கும் பொருட்டுக் கிருபை கூர்ந்து பெரியோர்கள் சொற்கொண்டு விளக்கியிருக்கிறார்கள். நாம் சாதனத்தில் மேல் நிலைக்கு வருகின்றபொழுதுதான் அவர்களுடைய சொல்லுக்கு அர்த்தம் விளங்குகிறது. சாதனம் செய்யாதவர்களுக்கு அவர்கள் கூறிய சொல்லின் அர்த்தம் விளங்காது. சர்க்கரை எப்படி இருக்கும் என்று சர்க்கரையைச் சுவைத்துப் பார்க்காத ஒருவன் கேட்டான். சர்க்கரையைச் சுவைத்துப் பார்த்தவன் அது தித்திக்கும் என்றான். தித்திப்பு என்றால் என்ன? என்று அவன் மேலும் கேட்டான். தித்திப்பு என்றால் இனிப்பு என்று சொன்னான். இனிப்பு என்றால் என்ன? என்று மேலும் கேட்டான். இனிப்பு என்றால் மதுரம் என்றான். மதுரம் என்றால் என்ன? என்று கேட்டான். மதுரம் என்றால் நன்றாக இருக்கும் என்றான். நன்றாக இருக்கும் என்றால் என்ன? என்று கேட்டான். இனி இதற்குமேல் விளக்க முடியாது. சர்க்கரையைச் சாப்பிட்டுப் பார்த்த பிறகுதான் விளங்கும் என்றான். சர்க்கரையை அருந்திப் பார்த்தவனுக்கு மேற்கூறிய சொற்களுக்குப் பொருள் விளங்கும். சர்க்கரையை அருந்தாதவனுக்கு அந்தச் சொற்களின் பொருள் விளங்காது. சாதனத்தில் ஈடுபட்டவர்களுக்குப் பெரியோர்கள் சொல்லிய சொற்களின் விளக்கப் பொருளை உணர முடிகிறது. சாதனத்தின் மேல் நிலைக்குப் போகாதவர்கள் ஏதோ நல்ல விஷயத்தை அச்சொற்கள் விளக்குகின்றன; அதற்குமேல் விளங்கவில்லை என்று கூறுவார்கள். கேட்டவற்றைத் தியானம் செய்து அதில் சுவை காணுகின்ற அளவு கேட்டவற்றின் பொருள் விளங்குகிறது. சாதனத்தில் ஈடுபடுகின்ற அளவுதான் மனம் தெளிவடைகின்றது. மெய்ப்பொருளைப்பற்றி அறிந்துகொள்வதும் சாதனையின் மூலமே சாத்தியமாகும்.

பேச்சையும் கடந்து போவது முடிந்தநிலை. அம் முடிந்த நிலையை ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு உபமானத்தின் மூலம் விளக்குகின்றார். விருந்தொன்றுக்குப் பலர் அழைக்கப்பட்டிருந்தனர். விருந்துக்கு வந்தவர்கள் கூப்பாடுபோட்டுப் பேசிக்கொண்டு இருந்தார்கள். உண்பதற்கு இலை போட்டு இலையில் அவர்கள் அமர்ந்த பின்பும் பேசிக்கொண்டே இருந்தார்கள். உணவு பரிமாறியதும் சாப்பிடும் சப்தம் கேட்டது. உண்பதின் கடைசிப்பகுதிக்கு வரவர சப்தம் குறைந்தது. மோர்ச்சாதம் சாப்பிடும் பொழுது 'உஸ், உஸ்' என்று உறிஞ்சும் சப்தம் மட்டும் கேட்டது. சாப்பிட்டு முடிந்து எல்லாரும் நித்திரைக்குப் போனார்கள். அப்பொழுது மௌனமாக இருந்தது. விருந்து ஆரவாரத்தில் ஆரம்பித்து மௌனத்தில் முடிந்தது. சிவபெருமான் திரிலோக குடும்பியாக இருக்கும் பொழுது ஓரே ஆரவாரம். வேதங்கள் அவரைத் துதிக்க அவர் நாத பிரம்மமாக இருக்கின்றார். அந்த நாதம் அமாத்ர பிரணவமாகிற பொழுது ஓசையற்ற நிலை ஏற்படுகிறது. அதைத் தாண்டிய நிலையில் தட்சிணாமூர்த்தியாக இருக்கும்பொழுது மௌன சொரூபமாக இருக்கின்றார். மௌன சொரூபமாக இருந்து அவர் அனைத்தையும் விளக்குகிறார். தட்சிணாமூர்த்தியாகக் குருநிலையில் இருக்கிறார். குருவாக இருக்கும் தட்சிணாமூர்த்தி யௌவனமாகவும், அவருடைய சிஷ்யர்கள் விருத்தாப்பியர்களாகவும் இருக்கிறார்கள். பரவஸ்து காலத்தை எடுத்து விழுங்கும் கால காலனாக இருக்கின்றார். ஆகையால் அவர் யாண்டும் யௌவனமாக இருக்கின்றார். 'நித்தியயௌவனா' என்பது அம்பிகைக்கு அமைந்துள்ள ஒரு பெயர். அம்பிகை நித்திய யௌவனமாக இருக்கிறாள்; சிவனும் நித்திய யௌவனமாக இருக்கின்றார். சிஷ்யர்கள் பல பிறவிகள் எடுத்து அனுபவத்தில் விருத்தர்களாக இருக்கிறார்கள். முடிந்தநிலை மௌனம் ஆகும்.

அக்பர் சக்கரவர்த்தியின் சமஸ்தானத்தில் "இறைவன் பேசுவது என்ன பாஷை?" என்ற கேள்வி எழுந்தது. அரேபிய பாஷை என்று முகம்மதியர்கள் கூறினர்கள். வேதம் சம்ஸ்கிருதத்தில் அமைந்திருப்பதால் இறைவன் பேசுவது சம்ஸ்கிருத பாஷை என்று இந்துக்கள் மொழிந்தார்கள். இதில் எது சரி என்று

கண்டுபிடிப்பதற்கு ஒரு யுக்தியைக் கையாண்டார்கள். அங்க லட்சணங்களோடும் நிறைநிலையோடும் பிறக்கின்ற குழந்தையை எடுத்து சப்தம் எதுவும் இல்லாத இடத்தில் அக்குழந்தையை வைத்து நல்ல பாங்கில் வளர்க்க வேண்டும். பறவையின் ஒலி கூட அக்குழந்தையின் காதில் விழக்கூடாது. அக்குழந்தைக்குப் பணிவிடை செய்பவர்கள் மௌனமாகக் காரியங்களைச் செய்யவேண்டும். அத்தகைய சூழ்நிலையில் வளர்கின்ற குழந்தை என்ன பாஷை பேசுகிறதோ அந்தப் பாஷை இறைவனுடைய பாஷை என்று முடிவு செய்யலாம். இங்ஙனம் முடிவுசெய்து அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அக்பர் செய்யும்படி கூறினர். அத்தகைய சூழ்நிலையில் ஒரு குழந்தையைப் பதினறு ஆண்டுகள் வளர்த்தார்கள். அப்படி வளர்ந்த குழந்தை மௌனமாக இருந்தது. எனவே இறைவனுடைய பாஷை மௌனம் என்று முடிவுகட்டினர்கள். அவர்கள் செய்த முடிவு சரியானது. இறைவன் சொற்பதம் கடந்ததொல்லோனாக இருக்கின்றான். பிரபஞ்சமயமாக இருப்பது ஓசைசொருபமாக இருக்கிறது. இறைவன் பிரபஞ்சத்துக்கு அப்பால் இருக்கின்றான். பிரபஞ்சத்துக்கப்பால் சலனம் இல்லாததாய் ஆங்கு மௌனம் நிலவுகிறது. சிதம்பர ரகசியம் என்று சொல்லுவது உண்டு. மனதுக்கு எட்டாத மன அதீதத்தில் இருப்பதுதான் சிதம்பர ரகசியம் ஆகும். அது தான் ஆத்ம சொருபம். மௌன சொருபமாக இருக்கின்ற ஆத்ம சொருபத்தை அடைவதற்கு நாமும் மௌனமாக இருந்து பழகவேண்டும். இடைஇடையே மௌனம் கடைப்பிடிப்பது நல்ல ஆத்மசாதனம் ஆகும். மன அடக்கத்துக்கும் அது ஒரு உபாயமாக இருக்கிறது. சமீபகாலத்தில் மௌனத்தைத் தீவிரமாகக் கடைப்பிடித்தவர் மகாத்மா காந்தியாவார். திங்கட்கிழமை தோறும் மாலை நான்கு மணி வரையில் யாருடனும் பேசமாட்டார். இந்தியாவுக்குச் சுதந்திரம் தருவதைப் பற்றிய பேச்சு வார்த்தை இர்வின் பிரபுவுக்கும், மகாத்மாகாந்திக்கும் இடையே நடந்துகொண்டிருந்தது. லண்டனில் பார்லிமெண்ட் இதைப்பற்றி விவாதித்துக்கொண்டிருந்தது. ஒரு திங்கட்கிழமை காலை லண்டனிலிருந்து இர்வின் பிரபுவோடு தொலைபேசியின் மூலம் ஒரு விஷயத்தைப் பேசினர்கள். அவ்விஷயத்தைப்பற்றி இர்வின் பிரபு மகாத்மாவிடம் கேட்டாக வேண்டும். ஆனல் அன்று மகாத்மா மௌனத்தில் இருந்ததால் மகாத்மாவைக் கேட்கமுடியவில்லை. பார்லிமெண்ட் காத்திருக்கிறது என்றார்கள். பார்லிமெண்ட் காத்திருந்தாலும், சுயராஜ்யம் வராது போய்விட்டாலும் மகாத்மா விரதத்தை மாற்ற மாட்டார் என்றார்கள். அத்தகைய மன உறுதிவேண்டும். சில நிமிடங்கள் கூட மௌனமாக இருப்பது சிலருக்கு முடியாது. அது மனம் அடங்காத நிலையைக் குறிக்கிறது. பேசாது இருந்து பழகுவது மன அடக்கத்துக்கு உபாயமாகும். சிலர் வாய்பேசாது சைகைகள் பண்ணுவார்கள். அது மௌனம் ஆகாது. அப்படி மௌனம் அனுஷ்டிக்கும்பொழுது மௌனத்தைக் கலைப்பதற்குச் சோதனைகள் வரும். அச்சோதனைகளுக்கு வசப்பட்டு மௌன விரதத்தை விட்டு விடக்கூடாது. மௌன விரதத்தை உறுதியோடு கடைப்பிடிக்கும்பொழுது உள்ளம் உறுதியும் தெளிவும் பெறுகிறது. வாய் பேசாது இருப்பது மௌனத்தின் ஆரம்பநிலையாகும். அதற்கு அடுத்தபடியாக உடலை அசையாது வைத்திருப்பது அமைகிறது. அது இடைத்தரமான மௌனம். தலைத்தரமான மௌனம் மனம் அடங்கியிருப்பதாகும். மனம் அசையாது ஆத்ம சொருபத்தில் லயமாகிறபொழுது மௌனம் முற்றிலும்அனுஷ்டிக்கப்படுவதாகிறது. அதைத்தான் தாயுமானவர் ''சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணம் என்று எம்மால் அறிதற்கு எளிதோ பராபரமே'' என்று பகர்கிறார்.

இயற்கைத்தாய் நமக்கு எல்லாவிதத்திலும் உபதேசம் செய்கின்றாள். நம் மனம் பரிபாகம் அடையும்பொழுது உண்மை நமக்கு விளங்குகிறது. சுவேதகேது என்பவன் பிராகிருதனக ரிஷி ஆசிரமத்துக்கு வந்தான். ரிஷி ஆசிரமத்தில் பொருத்தமான சூழ்நிலையில் அவன் வளர்ந்து வந்தான். அவன் அந்தக்கரணம் தூய்மை அடைந்தபொழுது பிரகிருதியிலுள்ள அனைத்தும் அவனுக்கு ஞானேபதேசம் செய்வதை உணர்ந்தான். அருள் நிலையிலிருந்து நாம் பிரகிருதியைப் பார்க்கும்பொழுது பிர

கிருதியிலுள்ள அனைத்தும் நமக்கு ஞானம் புகட்டுவதை அறியலாம். பிரகிருதியைக் கடந்து அப்பால் போவதற்குப் பிரகிருதி வழி காட்டிக்கொண்டிருக்கிறது. பிரகிருதி நாள் தோறும் நமக்குப் புகட்டுகின்ற பாடம் நாம் பரிபாகம் அடைகின்றபொழுது நமக்கு விளங்குகின்றது. கனவில் நாம் காண்பது விழித்தவுடன் நம்மைவிட்டு அகல்கிறது. கனவில் விசனப்படுகிறவன் விழித்தவுடன் விசனப்படுவதில்லை. விசாரம் செய்து வீண் கனவு என்று அதை ஒதுக்கித்தள்ளுகின்றான். விழிப்புநிலை வெறும் கனவு என்கின்ற உண்மை நமக்கு விளங்கவேண்டும். பல ஜன்மங்கள் ஆனாலும் அதை நாம் கற்றுக் கொள்ள முடிவதில்லை. மனம் பரிபாகம் அடைந்தவர்களுக்குத்தான் விழிப்பும் வெறும் கனவு என்கின்ற உண்மை விளங்குகிறது. விழிப்பு நிலையில் நிகழ்வதை எப்படிக் கனவாகக் கொள்ளவேண்டும் என்பதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய கதை வருமாறு:"கணவனும், மனைவியும் இல்லறம் நடாத்தி வந்தார்கள். நீண்ட காலத்துக்குப் பிறகு அவர்களுக்கு ஒரு நல்ல மகப்பேறு வாய்த்தது. அக்குழந்தையை அவர்கள் நன்றாக வளர்த்து வந்தார்கள். குழந்தைக்கு ஏழு வயது ஆனபொழுது அது நோய்க்கு ஆளானது. வேண்டிய சிகிச்சை செய்தார்கள். நள்ளிரவில் தாய் தன் மகனுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தபொழுது குழந்தை காலமாகிவிட்டது. தூங்கிக்கொண்டிருந்த கணவனை மனைவி எழுப்பி 'மகன் இறந்துபோய்விட்டான்' என்று கூறினாள். கணவன் எழுந்து சிலைபோல் உட்கார்ந்திருந்தான். 'மகன் போனதைப்பற்றி உங்களுக்குக் கவலை இல்லையா? கவலையின் அறிகுறி இல்லாது உட்கார்ந்திருக்கிறீர்களே' என்று கேட்டாள் மனைவி. 'நான் யோசித்துக்கொண்டிருக்கிறேன்' என்றான் கணவன். 'என்ன யோசித்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று மனைவி கேட்டாள். நீ எழுப்புவதற்கு முன்பு நான் கனவு கண்டு கொண்டிருந்தேன். அக்கனவில் நான் சக்கரவர்த்தியாக இருந்தேன். எனக்கு ஏழு குமாரர்கள் இருந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு கலையில் வல்லுநராக இருந்தார்கள். அவர்கள் தங்களுடைய கலைத்திறன்களை ஒரு சபையில் காட்டிக் கொண்டிருந்தார்கள். நான் அவற்றை ரசித்துக் கொண்டிருந்தேன். அவ்வமயம் நீ எழுப்பி விட்டாய். இப்பொழுது நீ மகன் இறந்துபோய்விட்டான் என்கின்றாய். நீ கூறுகின்ற மகனுக்கு வருந்துவதா? கனவில் கண்ட ஏழு புத்திரர்களை இழந்ததற்கு வருந்துவதா? என்பது எனக்கு விளங்கவில்லை. ஆகையால் நான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்' என்றான் கணவன்.'' இத்தகைய பாடம் நமக்கும் வந்து கொண்டிருக்கிறது. அதை நாம் என்றைக்குக் கற்றுக் கொள்ளப் போகிறோமோ தெரியவில்லை. சொப்பனம் எவ்வளவு அநித்தியமோ, ஜாக்ரத அவஸ்தையும் அவ்வளவு அநித்தியம் என்பது நாம் மனபரிபாகம் அடைகிறபொழுது நமக்கு விளங்குகிறது. பரம்பொருளைத் தவிர மற்ற யாவும் அநித்தியமானவை. பிரபஞ்சம் அநித்தியமானது. பிரபஞ்சத்தைக் கொண்டு நித்தியமாகிய பரம்பொருளைத் தேடவேண்டும் என்பதைச் சுவேதகேது உணர்ந்தான். மன பரிபாகம் சுவேதகேதுவுக்கு இருந்தமையால் அப்படி உணர்ந்தது சுவேத கேதுவுக்குச் சாத்தியமாயிற்று. பரிபாகம் அடைந்திருந்த பிரஹலாதனுக்கும் இரணியகசிபின் செயல்களெல்லாம் பரமாத்மாவினுடைய லீலைகளாகத் தென்பட்டன. அத்தகைய பரிபாகம் நமக்கு வந்துவிட்டால் இடையறாது இயற்கை நமக்குப் போதனை செய்துவருவதை நாம் அறியலாம். இடையறாது இறைவன் நம்மைப் பக்குவப்படுத்தி வருகிறார். நாம் பக்குவம் ஆகாது இருப்பதால் நமக்கு அது விளங்காததாக இருக்கிறது. நாம் பக்குவமாகி விட்டால் அவர் புகட்டிக் கொண்டிருக்கிறது நமக்கு விளங்குகிறது. நாம் பக்குவமடைவது செய்யும் சாதனையைப் பொறுத்திருக்கிறது. சாதனை எவ்வளவுக்கெவ்வளவு தீவிரமடைகிறதோ அவ்வளவுக்கவ்வளவு விரைவில் பக்குவமடைகிறோம். இறைவனை அடைதற்கான மார்க்கத்தில் சிரத்தையுடன் செல்வோமாக. சாதனை தீவிரமாகும்பொழுது உள்ளம் தெளிவடைந்து மெய்ப்பொருள் காட்சி பெறுகின்றோம். உள்ளத்தைத் தெளிவாக்கி மெய்ப்பொருள் காட்சி பெறுவோமாக. (முற்றும்)

# ஏகலைவ்யனின் குருபக்தி

( 424ஆம் பக்கத் தொடர்ச்சி )

காட்சி 12.

(ஏகலைவ்யன் நள்ளிரவில் எழுந்திருந்து நாம பஜனை பண்ணுகிறான்.)

ஜய கணேச ஜய கணேச ஜய கணேச பாஹிமாம்
ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ஸ்ரீ கணேச ரக்ஷமாம்.
(மூன்று தடவை)

(கணபதி பிரசன்னமாகிறான். தலையில் குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போட்டு வீழ்ந்து வணங்குகிறான்.)

**ஏகலைவ்யன் :** மகாகணபதயே நம: விக்ன ராஜா, பார்வதி புத்ரா, ஞானசிந்து லம்போதரா, மூஷிக வாஹனா! உன்னைப் போற்றுகிறேன். கிருபை கூர்ந்து நீ காட்சிகொடுத்து அருளுகின்றாய். உன்னுடைய அனுக்ரஹத்தினால் எனக்குச் சிரேயஸ் அனைத்தும் வாய்ப்பதாகுக.

**கணபதி :** ஏகலைவ்யா, ஒருமை மனதாக நீ குருபக்தியில் ஈடுபட்டிருக்கிறாய். அதனால்தான் ஆத்ம சாதனத்தில் நீ அதிவேகம் முன்னேற்றம் அடைந்து வருகிறாய். உனக்கு எல்லா நலன்களும் உண்டாகுக.

**ஏகலைவ்யன் :** விக்னராஜனே, உன்னைப் போற்றுகிறவர்கள் விக்னங்களினின்று விடுதலை அடைகிறார்கள் என்பது கோட்பாடு. ஆனால் எல்லார்க்கிடையிலும் அக்கோட்பாடு நிறைவேறுவதில்லை. அதற்குக் காரணம் யாதோ?

**கணபதி :** மக்கள் என்னை விக்னராஜன் என்று அழைக்கின்றனர். ஆனால் அதன் உட்கருத்து அவர்களுக்கு விளங்குவதில்லை. என்னை வழுத்துகிற சிலருக்கு நான் விக்னத்தைப் போக்குகிறேன். வேறு சிலர்க்கு விக்னத்தை விளைவிக்கிறேன். அது அவர்களுக்கு விளங்குவதில்லை.

**ஏகலைவ்யன் :** விக்னத்தைப் போக்கு என்று வேண்டுகிறவர்களுக்கு விக்னத்தை வளர்ப்பது விநயகா பொருந்துமா?

**கணபதி:** தாயின் இடுப்பிலிருக்கும் சிசு ஒன்று எரிகிற தீபத்தைப் பிடிக்க முயலுகிறது. ஆனால் தாயோ தீபத்திற்கு எட்ட நின்றுகொண்டு தன் குழந்தை அந்த அக்னிப் பிழம்பைத் தொட இடம் தருவதில்லை. அவள் செய்வது நியாயந்தானே!

**ஏகலைவ்யன் :** ஆம் பிரபோ! முற்றிலும் நியாயமானதே.

**கணபதி :** அதே பாங்கில் சிலர்க்கு வாய்த்திருக்கும் விக்னங்களை விலக்க வேண்டுமென்று அவர்கள் வேண்டுகின்றார்கள். அத்தகைய விக்னங்களை உறுதியாகப் போட்டு வைத்திருப்பதால்தான் அவர்கள் தீங்குகளினின்று தப்பித்துக் கொள்ளுகிறார்கள். அத்தகைய விக்னங்களைப் போக்கடித்தால் அவர்கள் நெறி பிறழ்ந்துபோய்த் துன்பத்திற்கு ஆளாவார்கள். ஆதலால் விஷயத்தை உள்ளபடி அறிந்து கொள்ளாதவர்களுக்கு நான் விக்னத்தைப் போக்கவில்லை என்ற ஏமாற்றம் உண்டாகலாம். விக்னங்களை நிலைத்திருக்கச் செய்வதால்தான் நான் அவர்களுக்கு நலனை உண்டு பண்ணுகிறேன். உடனுக்குடனே அது விளங்காவிட்டாலும் நாளடைவில் அவர்கள் எடுத்துக்கொள்ளுகிற முயற்சிக்கு விக்னம் வந்தது நல்லது என்று உணருவார்கள். ஆக விக்னத்தை விலக்குகிற முறையிலும் விக்னத்தை உறுதிப்படுத்துகிற முறையிலும் நான் விக்ன ராஜாவாக இருக்கிறேன். இந்த இரண்டு விதங்களிலும் நான் மக்களுக்கு நலனையே செய்துவருகிறேன்.

**ஏகலைவ்யன் :** பிரபோ, இது ஒரு பெரிய கோட்பாடு. இதுகாறும் நான் இதைப்பற்றி அறியாதிருந்தேன். மக்கள்புரிகிற சில பிரார்த்தனைகள் நிறைவேறப் பெறுதிருப்பது அவர்கள் செய்த பாக்கியம் என உணருகிறேன். வேழ முகத்தோனே, நீ விக்னம் போடுதலிலும், விக்னத்தை அகற்றுதலிலும் யாண்டும் விக்னராஜா வாக இருந்து வருவாயாக. உன்னிடத்து மற்றொரு விண்ணப்பம். மக்கள் எல்லாரும் மேன்மையுற வேண்டுகிறார்கள். ஆனால் எல்லாரும் மேன்மையுறுவதில்லை. அதற்குக் காரணம் யாதோ?

**கணபதி:** ஆம். அதற்கேற்ற காரணம் உண்டு. அது மிக எளியது. ஆனால் அது எல்லார்க்கும் விளங்குவதில்லை. செயல்களில்

பெரியவை சிறியவை என்கிற பாகுபாடு இல்லை. செயல்களுள் சிலவற்றை அற்பமானவைகள் எனக் கருதி அவைகளைப் புறக்கணிக்கின்றனர். அப்படிப் புறக்கணிக்கின்றவர் மேன்மையுற மாட்டார்கள். செயல்கள் அனைத்தும் ஈசனுடைய அருளால் நிகழ்கின்றன. ஆதலால் எச்செயலையும் அல்பமானதென்று புறக்கணிக்கலாகாது. தற்செயலாய் வாய்க்கின்ற சிறு சிறு செயல்களையும் பேருக்கத்தோடும் பக்தி விசுவாசத்தோடும் செய்து வருகிறவன் நிச்சயமாக மேன்மையுறுவான். உதாரணம் ஒன்று சொல்லுகிறேன் கேள். மக்கள் நடக்கிற பாதையில் முள் ஒன்று கிடக்கிறது. அதைப் பொறுக்கி எடுத்து அப்புறப்படுத்துவது தன்னுடைய அந்தஸ்துக்குப் பொருந்தாது என்று அதைப் புறக்கணிக்கிறவன் மேன்மையுறமாட்டான். வழி பிசகிப்போன சிறு குழந்தை ஒன்று பரிதவிக்கிறது. அது அசுத்தமானது ஆதலால் அதற்கு உதவி ஏதாவது புரிவது பொருந்தாது என்று புறக்கணிக்கிறவர்கள் மேன்மையுறமாட்டார்கள். தோட்டியின் செயலைச் செய்வதும் ஈஸ்வர ஆராதனையே எனக் கருதி அதில் முற்படுபவன் மேன்மையுறுகிறான். அப்போதைக்கப்போது வாய்க்கிற சிறுசிறு சேவைகளையும் சிரத்தையோடு செய்து வருபவன் நிச்சயமாக மேன்மையுறுவான். இது வாழ்க்கையைப் பற்றிய மேலான கோட்பாடு ஆகும்.

**ஏகலைவ்யன்:** கண நாதா, உன்னிடமிருந்து வாழ்க்கைக்குரிய மேலான கோட்பாடுகள் இரண்டை இன்று நான் அறிந்துகொண்டேன். விக்ன ராஜாவாகிய நீ நான் படைத்துள்ள குரு பக்திக்கு விக்னம் போட்டுவிடாதே. குரு பக்திக்கு இடைஞ்சலாயிருக்கிற விக்னங்களை எல்லாம் கிருபை கூர்ந்து விலக்கி ஓட்டுவாயாக.

**கணபதி:** ஏகலைவ்யா, நீ பேணிவருகிற குரு பக்தியை நான் பெரிதும் பாராட்டுகிறேன். யார் ஒருவன் குருபக்தியை மேலும் மேலும் வளர்த்து வருகிறானோ அவனுக்குத் தடையாக நிற்கும் விக்னங்களெல்லாம் பறந்தோடிவிடும். குருபக்தனாகிய நீ அந்தச் சிரேயஸில் மேலும் மேலும் மேலோங்கி வருவாயாக.

**ஏகலைவ்யன்:** பிரபோ, நமோ நம:

## காட்சி 13

(சரஸ்வதி பூஜை நாளன்று ஏகலைவ்யன் கலைமகளை வழுத்துகின்றான்.)

ஜயசரஸ்வதி ஜயசரஸ்வதி ஜயசரஸ்வதி பாஹிமாம்
ஸ்ரீ சரஸ்வதி ஸ்ரீ சரஸ்வதி ஸ்ரீ சரஸ்வதி ரக்ஷமாம்.

(மூன்று தடவை)

(சரஸ்வதி பிரசன்னமாகின்றாள்.)

**ஏகலைவ்யன்:** தாயே! கலைக்கடலே! உன்னை வணங்குகின்றேன்.

(வீழ்ந்து வணங்குகிறான்.)

சிறப்பு எதையும் அடையப்பெறாத என்னையும் உன் செல்வனாகக் கருதித் தாயே, நீ எனக்குக் காட்சி கொடுத்து அருள்கின்றாய். உன்னுடைய கிருபைக்குக் கைம்மாறு உண்டோ!

**கலைமகள்:** செல்வா, உன்னிடத்துச் சிறப்பு ஒன்று உண்டு. ஆகையினால்தான் உன்னுடைய ஞானக்கண்ணுக்கு நான் காட்சி தருகிறேன். குருபக்தியிலேயே ஆழ்ந்தவனாக நீ இருந்து வருகிறாய். குருபக்திக்கு நிகரான அருள்பேறு வேறு எதுவுமில்லை.

**ஏகலைவ்யன்:** தாயே! உன்னுடைய கடாட்சத்தால் நான் பயின்று வருகிற குருபக்தி மேலோங்குக. கலைகள் அனைத்துக்கும் நீ அதிஷ்டான தெய்வமாகத் திகழுகின்றாய். கலைகள் அனைத்தையும் கற்றுக்கொள்ள மனிதனுக்கு ஆயுள் போதாது. அதற்கேற்ற அளவு ஆற்றலும் இல்லை. உய்வு அடைய விரும்புகிற ஒருவன் எதை முக்கியமாகக் கற்கவேண்டும் என்பதைக் கிருபை கூர்ந்து பகர்ந்தருள்வாயாக.

**கலைமகள்:** மகனே, இப்பொழுது நீ பயின்று வருகிற பயிற்சிதான் கலைகள் அனைத்துக்கும் ஆதரவு தரவல்லது. யார் ஒருவன் குருபக்தியை வளர்த்து வருகிறானோ அவன் கற்கவேண்டிய அனைத்தையும் கற்று வருகிறான். சாதிக்கவேண்டிய யாவையும் சாதித்தவனாகிறான்.

**ஏகலைவ்யன்:** தாயே, கலைகள் எண்ணிக் கையில் அடங்கா. நானோ தனுர்வேதம் என்ற ஒரு கலையில் கண்ணும் கருத்துமாயிருக்கிறேன். ஏனையவைகளைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. இந்த நிலை பாராட்டுதற்கு உரியதாகுமா?

**கலைமகள்:** செல்வா, மானுடன் ஒருவன்

கலைகள் அனைத்திலும் நிபுணன் ஆகமுடியாது. ஏதேனும் ஒரு கலை ஒருவனுக்கு வாய்க்கு மாகில் அவன் பாக்கியவான். எண்ணிறந்த கலைகளாக நான் இலங்கி வருகிறேன். உன் கலைஞானத்தை விசாலப்படுத்துவதற்கு ஒரு உபாயத்தைக் கையாண்டுவா. கலைவாணன் ஒருவனை நீ சந்திக்க நேரிடும்பொழுது அவனுடைய கலையைச் சுருக்கமாக உனக்கு விளக்கும்படி கேட்டுக்கொள். கேள்வி முயல் என்பதன் கோட்பாடு இதுவே. இம்முறையைக் கையாளுவதன் மூலமாக உன்னுடைய பொது அறிவு விரிவடைந்து வரும். அது உனக்குப் போதுமானது. மரம் ஒன்றுக்கு ஆணிவேர் ஒன்று உள்ளது. சல்லிவேர்களோ எண்ணிக் கையில் அடங்காதவை. ஆணிவேருக்கு நிகராக உன்னுடைய தனுர்வேத வித்தையை வளர்த்துவா. சல்லிவேர்களுக்கு நிகராக ஏனையவர்களிடமிருந்து மற்ற கலைகளை ஓர் அளவு கற்று வா. வித்தையில் வல்லுநன் கையாளுகிற முறை இது ஒன்றேயாம். இதன் வாயிலாக நீ பேரறிஞன் ஆவாய். உன்னிடத்தில் இருக்கிற குருபக்தி இவையாவுக்கும் நல்ல துணைபுரியும். குருபக்திக்கு நீ ஓர் ஆதர்ச புருஷனை இலங்குவாயாக.

**ஏகலைவ்யன் :** தாயே! உன் திருவடிகளில் வணக்கம்.

(கலைமகள் மறைகிருள்.)

## காட்சி 14.

(ஹஸ்தினபுரத்திலுள்ள கல்லூரியில் ஒரு வகுப்பு. துரோணரும் சிஷ்யர்களும்.)

பிரார்த்தனை – ஓம் ஸஹனவவது ஸஹனௌ புனக்து ஸஹவீர்யம் கரவா வஹை தேஜஸ் வினவதீதமஸ்து மாவித் விஷாவஹை ஓம் சாந்தி, சாந்தி, சாந்தி:

**துரோணர் :** நல்ல ராஜ்யம் எது?

**யுதிஷ்டிரன் :** ராம ராஜ்யம்.

**துரோணர் :** ராமராஜ்யம் என்ருல் என்ன?

**அர்ஜுனன் :** முடியரசும், குடியரசும் சமரசம் பெற்றிருப்பது ராம ராஜ்யம்.

**துரோணர் :** அதனல் வரும் நலன் யாது?

**பீமன் :** கோமானும், குடிமக்களும் ஒரு பரந்த குடும்பமாக வாழ்ந்து வருவது அதன் சிறப்பு.

**துரோணர் :** குடும்பம் என்ருல் என்ன?

**துரியோதனன் :** உடல் வாழ்க்கையில் உறுப்புக்கள் ஒன்ருேடொன்று ஒத்து உழைப்பது போன்று தாய் தந்தையர் மக்கள் ஆகிய எல்லாரும் இனிய நல்வாழ்வைக் குறிக்கோளாகக் கொண்டிருப்பது குடும்பமாகும்.

**துரோணர் :** நல்ல மனைவி யார்?

**யுதிஷ்டிரன் :** வாழ்க்கையில் கணவன் கொண்டுள்ள குறிக்கோளை அறிந்து அதற்கு முற்றிலும் துணைபுரிபவள் நல்ல மனைவியாகிருள்.

**துரோணர் :** நல்ல செல்வன் யார்?

**அர்ஜுனன் :** தன்னுடைய ஜீவிதம் தந்தை தாய் ஆகியவர்களுக்கு உரியதென்று அறிந்து தன்னை முற்றிலும் அவர்களிடத்து ஒப்படைத்திருப்பவன் நல்ல செல்வன்.

**துரோணர் :** கேட்ட கேள்விகளுக்கு நீங்கள் எல்லாரும் பொருத்தமான விடை விடுத்தீர்கள். நீங்கள் கற்று வருகிற கல்வி விரிவடைவதற்கு வெளியிடங்களுக்கு நாம் முகாம் போவது முற்றிலும் அவசியம். காலமெல்லாம் ஹஸ்தினபுரத்தில் கல்லூரியிலேயே அடைபட்டிருப்பது போதாது. அண்மையிலுள்ள ஆரண்யத்திற்குச் சென்று ஆங்குச் சில வாரங்கள் தங்கல் போட்டுக் காலத்தை நன்கு பயன்படுத்துவோம். அத்தகைய சூழ்நிலையில் புதிய பயிற்சிகள் பல உங்களுக்கு உண்டாகும்.

## காட்சி 15.

**இடம் :** ஏகலைவ்யனின் ஆஸ்ரமம்.

**ஏகலைவ்யன் :** ஹரகுரு ஹரிகுரு பரகுரு ஓம்
சிவகுரு விஷ்ணுகுரு சற்குரு ஓம்

(மூன்று தடவை)

குருதேவரின் அருளால் மேலான உண்மை ஒன்று இப்பொழுது எனக்குப் புலப்படுகிறது. சாதாரண நிலையில் லலித கலைகள் வேறு தனுர்வேதம் வேறு. ஆடல் பாடல் ஓவியம் முதலியன லலித கலைகள் ஆகின்றன. மனிதனுக்கு மகிழ்வூட்டுதற்கென்றே அவைகள் அமைந்துள்ளன. போட்டியிலும், போராட்டத்திலும் மனிதனுடைய திறமையைக் காட்டுதற்கென்றே தனுர்வேதம் அமைந்திருக்கிறது. பரஸ்பரம் உறவாடுதற்கென்று அமைந்ததன்று. பிறரை வெல்லுதற்கென்றே அது அமைந்திருக்கிறது. ஆனல் குருதேவர் அருளால் தனுர்வேதத்திலும் லலிதகலை இடம் பெறக்கூடும் என்பதை

உணருகிறேன். எதிரியை வெல்லுதற்கென்றல்லாது விளையாட்டுக்காக அவனைக் கட்டிப் போட்டுவிடலாம். விளையாட்டுக்காகவென்று யாரை வேண்டுமானாலும் கட்டிப் போட்டுவிடலாம். யாருக்கும் தீங்கு செய்யாது தனுர்வேதத்தின் மேலாம் படியை வெளிப்படுத்தலாம். தனுர்வேதத்தையும் லலித கலைகளையும் சமரஸப் படுத்தலாம் என்பதை உணருகிறேன். சந்தர்ப்பம் கிடைத்தால் இந்தத் திறமையை நான் பயன்படுத்துவேன்.

(நாய் ஒன்று ஆஸ்ரமத்தண்டை வந்து ஏகலைவ்யனைப் பார்த்துக் குலைக்கிறது.)

**ஏகலைவ்யன் :** குருநாதரின் அருளால் இதோ இப்பொழுதே எனக்கு நல்லதொரு சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. தனுர் வேதத்தை முரட்டுத்தனமாகப் பயன்படுத்தினல் இந்த நாயைத் துன்புறுத்துவதற்கோ அல்லது மாய்த்துத் தள்ளுதற்கோ எனக்குச் சாத்தியம். ஆனல் அங்ஙனம் செய்யமாட்டேன். இந்த நாய்க்குத் தீங்கு ஒன்றும் விளைவிக்காது அதன் வாயைக் கட்டிப் போட்டு விடுகிறேன். அதில் நான் வெற்றியடைந்தால் தனுர் வேதத்தையும் லலித கலையையும் சமரசப் படுத்தியதாகும். குருதேவரின் திருவருளை முன்னிட்டு அங்ஙனம் செய்ய முயலுகிறேன்.

(அம்பு ஒன்றை எடுத்து வில்லில் தொடுத்து எய்கின்ருன். அது ஒரு கற்றை அம்பாக மாறி நாயின் வாயில் நிறைந்திருக்கிறது. அது கடிக்கவோ, குலைக்கவோ முடியவில்லை. அத்தகைய அதிசய நிலையில் அகப்பட்டுக் கொண்ட நாய் திரும்பி ஓடுகிறது.)

## காட்சி 16.

(துரோணுச்சாரியருடைய புதல்வனுகிய அசுவத்தாமனும் தலைமாணுக்கனுகிய அர்ஜுனனும் உரையாடுகிருர்கள்.)

**அசுவத்தாமன் :** உல்லாசப் பிரயாணம் வருவதில் பயன்மிக உண்டு. கூண்டுகளுள் அடைபட்டுக் கிடக்கும் குருவிகள் போன்று இருக்கின்ரேம் நாம் வெறுமனே ஏட்டுக் கல்வியில் கருத்தைச் செலுத்துகிற பொழுது.

**அர்ஜுனன் :** கற்ற விஷயங்களைக் கண்கூடாகக் காண்கின்ரேம் இத்தகைய உல்லாசப் பயணம் வருகிற பொழுது.

**அசுவத்தாமன் :** பிரபஞ்சமே பரமனல் படைக்கப்பட்ட அழிவற்ற வேதம் என்னும் கோட்பாடு வந்துள்ளது.

**அர்ஜுனன் :** அந்த வேத சொருபமாக இந்த வனம் இலங்குகிறது. இதிலுள்ள நிகழ்ச்சிகளை நேரில் கண்டு அறிந்து கொள்ளுவதே வேத ஆராய்ச்சியாகிறது.

**அசுவத்தாமன் :** வேதம் என்று சொல்லப் பெறுவதும், சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்ம தேவன் என்று சொல்லப் பெறுபவரும் பிரபஞ்சம் என்று பகரப்பெறுவதும் ஒன்றேயாம்.

**அர்ஜுனன் :** பிரபஞ்ச நடைமுறையை நேரில் பார்த்து அறிந்து கொள்ளுவதுதான் வேத அத்யயனம். வெறும் நூலை ஓதிக் கொண்டிருப்பது கிளிப்பிள்ளை கல்வி கற்பதற்கு ஒப்பாகும்.

**அசுவத்தாமன் :** இங்குத் தென்படுகின்ற மரம் செடி கொடிகளாகிய ஸ்தாவர உலகம் வாழ்க்கைத் தத்துவங்களைச் சதா நமக்கு விளக்கிக் கொண்டிருக்கின்றன.

**அர்ஜுனன் :** கால நிலைக்கு ஏற்றபடி இடம் மாறிப் போகின்ற பறவைகளிடத்திலிருந்தும் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் பல இருக்கின்றன.

**அசுவத்தாமன் :** ஸ்தாவரங்கள் போன்று கல்விச் சாலைகளில் உறுதியாக இருந்து வருவதும் இடம் மாறிப்போகின்ற பறவைகள் போன்று உல்லாசப் பயணம் பண்ணிப் பலப் பல வாழ்க்கைத் தத்துவங்களைச் சரியாக அறிந்து கொள்ளுவதே நிறை கல்வியாகும்.

**அர்ஜுனன் :** தோழா, அதோ பார். நம்முடைய நாய் நரமித்திரன் எதையோ கவ்விக் கொண்டு வருகிறது.

**அசுவத்தாமன் :** அப்படியல்ல. அதன் வாயில் ஏதோ திணிக்கப்பட்டிருப்பதுபோன்று தென்படுகின்றது.

**அர்ஜுனன் :** ஆம் குருபுத்ரா! நீ மொழிவது முற்றிலும் மெய். அதன் வாயில் ஒரு கற்றை அம்பு திணிக்கப்பட்டிருக்கிறது பார்.

**அசுவத்தாமன் :** அதிலும் பெரிய அதிசயம் நரமித்திரனுடைய வாய் சிறிதேனும் காயப் படாதிருக்கிறது. இது போன்ற செயலை நம் குருகுலத்தில் யாராவது செய்ய முடியுமா?

**அர்ஜுனன் :** முடியவே முடியாது. வியப்புக்குரிய பெரிய அதிசயமாக இது விளங்கு

கிறது. இந்த நாயின் துணையைக் கொண்டே இது யாரால் எப்படி நிகழ்ந்தது என்பதைக் கண்டு பிடிப்போம்.

(இருவரும் நின்று கொண்டு விரலை நொடிக்கிறார்கள். நாய் அவர்களுக்கு வழிகாட்டிக் கொண்டு முன் செல்லுகிறது.)

### காட்சி 17

(நாய் நரமித்திரன் அர்ஜுனனையும், அசுவத்தாமனையும் ஏகலைவ்யனுடைய ஆஸ்ரமத்திற்கு அழைத்து வருகிறது. ஏகலைவ்யன் தியானத்தில் அமர்ந்திருக்கின்றான்.)

**அர்ஜுனன்:** இவன் யாரோ ஒரு இளம் தபஸ்வி. இவன் ஆழ்ந்து தியானத்தில் இருக்கின்றான். இவனுடைய தியானத்தைக் கலைப்பது பொருந்தாது. என்ன செய்யலாம்.

**அசுவத்தாமன்:** நம் போக்கில் இறைவனுடைய திருநாமத்தைப் போற்றுவோம். எந்தத் தபஸ்வியும் அதற்கு ஆக்ஷேபம் பண்ண முடியாது.

(இருவரும் பாடுகிறார்கள், சங்கர சங்கர சம்போ, சிவ சங்கர. ஏகலைவ்யன் தியானத்திலிருந்து எழுந்திருந்து இருவரையும் நமஸ்கரிக்கிறான்.)

**அர்ஜுனனும், அசுவத்தாமனும் சேர்ந்து:** யுவயோகீஸ்வரா! நமோ நம:

**ஏகலைவ்யன்:** நமோ நம:

**அசுவத்தாமன்:** இளையோய், இதோ பார்! இந்த நாயின் பரிதாபகரமான நிலையை. இது எப்படி நிகழ்ந்தது என்று உனக்கு ஏதாவது தெரியுமா? இந்த நாய் எங்களுக்குச் சொந்தம். எங்களை அழைத்துக்கொண்டு இங்கே வந்திருக்கிறது.

**ஏகலைவ்யன்:** ஆம். இந்த நாயினிடத்து இருக்கின்ற இக்கட்டான நிலைக்கு நானே பொறுப்பாளி.

**அர்ஜுனன்:** இந்த நாய் உனக்கு ஏதேனும் தீங்கு செய்ததா ?

**ஏகலைவ்யன்:** அது எனக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை. என்னைப் பார்த்து அது குலைத்தது. தனுர் வேதத்தையும், லலித கலையையும் சமரஸப்படுத்த முடியுமா? என்னும் ஆராய்ச்சியில் ஓர் அம்பை மந்திரித்து அதன்மீது எய்தேன். குருதேவர் அருளால் ஓர் அம்பு ஒரு கற்றை அம்பு ஆயிற்று. நாய்க்கு ஒரு தீங்கும் செய்யாது அதன் வாயை அந்தக் கற்றை அம்பு சென்று அடைத்து விட்டது. தனுர் வேதத்தையும் லலித கலையையும் சமரஸப்படுத்தலாம் என்னும் மகிழ்ச்சிகரமான முடிவுக்கு நான் வந்தேன். இந்த நாய் தன்போக்கில் எங்கேயோ ஓடிப்போயிற்று. இதுதான் நிகழ்ந்த விஷயம்.

**அர்ஜுனன்:** ஒரு கற்றை அம்பை அதன் வாயில் அதைச் சிரமப்படுத்தாது எய்தாயே அந்த ஒரு கற்றை அம்பை மீட்டெடுக்க உனக்கு முடியுமா ?

**ஏகலைவ்யன்:** குருதேவர் அருள் இருந்தால் அதுவும் சாத்தியம்.

**அசுவத்தாமன்:** எங்கள் நாயை இந்த இக்கட்டினின்று இளைஞா விடுவி பார்ப்போம்.

(ஏகலைவ்யன் கண்மூடி குரு நமஸ்காரம் பண்ணுகின்றான். பிறகு ஏதோ முணுமுணுத்துக்கொண்டு ஓர் அம்பு எய்கிறான். நாய் நரமித்திரன் விடுதலையடைகிறது. அர்ஜுனனும் அசுவத்தாமனும் ஒருவரைப் பார்த்து ஒருவர் வியப்படைகிறார்கள்.)

**அர்ஜுனன்:** குரு கிருபையிருந்தால் அதுவும் சாத்தியம் என்றாயே உன் குரு யார்?

**ஏகலைவ்யன்:** எனக்குத் திறமையையும் ஞானத்தையும் நல்குபவர் துரோணாச்சாரியர்.

**அர்ஜுனன்:** எனக்குப் பக்கத்தில் நிற்கும் இவன் யார் என்பது உனக்குத் தெரியுமா?

**ஏகலைவ்யன்:** இவன் யார் என்பது எனக்குத் தெரியாது. இவனை நான் முன்பு பார்த்தது கிடையாது.

**அர்ஜுனன்:** என்னை நீ முன்பு எங்கேயாவது பார்த்திருக்கின்றாயா?

**ஏகலைவ்யன்:** பார்த்ததாக ஞாபகம் இல்லை. நீ யார் என்பதுவும் எனக்குத் தெரியாது.

**அர்ஜுனன்:** இவன் துரோணாச்சாரியரின் புதல்வன் அசுவத்தாமன். என் பெயர் அர்ஜுனன். துரோணாச்சாரியருடைய சிஷ்யர்களுள் நான் ஒருவன். நாங்கள் இருவரும் பெரும்பாலும் ஆச்சாரியருடனேயே வாழ்ந்து வருகிறோம். இளைஞா, நீ எங்களை எப்படி அறிந்து கொள்ளாதவனாக இருக்கின்றாயோ அதே பாங்கில் நாங்களும் உன்னை அறிந்துகொள்ளாதவர்களாக இருக்கின்றோம். உன்னை எப்பொழுதாவது ஆச்சாரியருடைய

சந்நிதானத்தில் வைத்து நாங்கள் பார்த்தது கிடையாது. அப்படியிருந்தும் நீ அவருடைய சிஷ்யன் என்கின்ருய். இந்த மர்மம் எங்களுக்கு விளங்கவில்லை.

**ஏகலைவ்யன்:** சிஷ்யர்களாகிய நீங்கள் ஒரு பெரும் கூட்டமாக ஆச்சாரியரோடு வாழ்ந்து வருகிறீர்கள். அந்த வாய்ப்பு எனக்கு இல்லை. ஆயினும் தன்னந்தனியனுகிய எனக்குத் தன்னந்தனியராகவே வந்து பாடம் புகட்டு கிருர். இந்த மர்மத்தை வேறு யாரும் அறிந்தது கிடையாது.

**அசுவத்தாமன்:** அர்ஜுனு! மர்மம் என்ருல் இதுதான் மர்மம். இவனேடு நாம் மேற்கொண்டு உரையாடுவதில் பயனில்லை. நேரே அப்பாவிடம் நாம் செல்வோம். தனுர்வித்தையில் ஏதேதோ ரகசியங்களை எனக்குப் புகட்டியிருப்பதாக அவர் சொல்லுகிருர். இன்னும் ஏதேதோ அற்புதமான ரகசியங்களை உனக்குப் புகட்டியிருப்பதாகவும் அவர் இயம்புகிருர். இந்த ரகசியங்களை எல்லாம் தூக்கி அடிக்கிறது இந்த இளைஞன் கற்றிருக்கிற இரகசியம். ஏன் இப்படியெல்லாம் ஏதேதோ அரிய பெரிய விஷயங்களை ஒருவனேடு ஒருவனைச் சம்பந்தப்படுத்தாது அவர் புகட்டி வருகிருர் என்பது நமக்கு விளங்கவில்லை. நேராக அவரிடமே சென்று இந்த நுட்பத்தை உடைத்துப் பேசுவோம்.

**அர்ஜுனன்:** தவ வலிவு பெற்றுள்ள இளைஞா, உனக்கு வந்தனம். கூடுமானல் நாம் மறுபடியும் சந்திப்போம். இப்பொழுது சென்று வருகிறேம். (இருவரும் போகிருர்கள்)

(அசுவத்தாமனும் அர்ஜுனனும் துரோணுச்சாரியரை வந்து சந்திக்கிருர்கள்.)

**அர்ஜுனன்:** குருதேவா! நாங்கள் இருவரும் ஒருபோக்கில் மனம் குழம்பித் தங்களிடம் வந்துள்ளோம். எங்கள் ஐயத்தைத் தங்கு தடையின்றித் தங்களிடம் தெரிவிக்கலாமா!

**துரோணுச்சாரியர்:** அதற்கு ஆட்சேபம் யாது உளது? தந்தையுடன் தாராளமாகப் பேசுவதற்கு நிகராக ஆச்சாரியரோடும் பேசுவதற்கு உங்களுக்கு எல்லாவிதமான உரிமைகளும் உண்டு. வேண்டியவாறு விஷயங்களை வினவலாம்.

**அர்ஜுனன்:** மைந்தனுகிய இந்த அசுவத்தாமனுக்கும் புகட்டியிராத தனுர்வேத ரகசியங்கள் சிலவற்றை எனக்குப் புகட்டியிருக்கிறீர்கள். அதேவிதத்தில் எனக்குப் புகட்டியிராத வேறு சில விஷயங்களை மைந்தன் அசுவத்தாமாவுக்குப் புகட்டியிருக்கிறீர்கள். இப்படிச் செய்ததில் வியப்பு ஒன்றுமில்லை. எங்கள் யாருக்குமே தெரியாத அந்தரங்க சிஷ்யன் ஒருவனைத் தாங்கள் பேணி வருகிறீர்கள். அன்னவனுக்குத் தாங்கள் புகட்டியருளியுள்ள தனுர்வேத மகிமை அற்புதமானது. இந்த விதத்தில் ஒரு சிஷ்யனுக்குத் தெரியாது மற்ரெரு சிஷ்யனுக்கு அற்புதமான கலை ரகசியங்கள் சிலவற்றைப் புகட்டி வைப்பதற்குக் காரணம் யாதோ? கிருபைகூர்ந்து இந்த முரண்பாட்டின் உட்கருத்தை எங்களுக்கு விளக்கியருள்வீர்களாக!

**துரோணுச்சாரியர்:** அர்ஜுனு, இப்பொழுது நீ கிளப்பியுள்ள கேள்வி யாது என்பது எனக்கு விளங்கவில்லை. மைந்தன் என்கின்ற முறையில் தனுர் வேத மகிமைகள் சில வற்றை அசுவத்தாமனுக்கு மட்டும் புகட்டியிருக்கிறேன் என்பது உண்மை. உன்னுடைய திறமையை முன்னிட்டுத் தனுர்வேத வல்லமைகள் வேறு சிலவற்றை உனக்கு மட்டும் புகட்டியிருக்கிறேன் என்பதுவும் உண்மை. உனக்குப் புகட்டியிருப்பது உன்னுடைய திறமையை முன்னிட்டும் எதிர் காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் அவனுடைய பெரிய திட்டத்துக்கு நீ கருவியாக இருக்கப் போகிருய் என்பதை முன்னிட்டேயாம். நீங்கள் இருவர் நீங்கலாக ஏனைய எல்லார்க்கும் நான் புகட்டி வருவது ஒரேபாங்கில்தான் அமைந்திருக்கிறது.

**அர்ஜுனன்:** ஆச்சாரிய தேவா! சிறிது நேரத்துக்கு முன்புதான் தங்களுடைய அற்புதமான சிஷ்யன் ஒருவனை நாங்கள் நேரில் சந்தித்தோம். அவனுக்காகவென்று நீங்கள் தனியாகப் பாடம் புகட்டி வருகிறீர்கள் என்று அவன் தெரிவித்துள்ளான். மேற்கொண்டு அதை நீங்கள் மறைக்க முடியாது. இந்தப் போக்கில் உங்களுடைய கலைத்திறனைப் பரப்பி வருவதின் மர்மம்தான் எங்களுக்கு விளங்கவில்லை. அதைத் தெளிவுறுத்தும்படி விண்ணப்பிக்கின்ரேம்.

**துரோணாச்சாரியர் :** அர்ஜுனா, நீ பகருவது எனக்கு விளங்கவில்லை. நீ குறிப்பிடுகிற மாணாக்கன் யார்? அவன் எங்கே இருக்கிறான்? சந்தேகம் ஏதாவது இருந்தால் அவனைச் சந்தித்த பிறகு அதைத் தெளிவுபடுத்தலாம்.

**அர்ஜுனன் :** இந்த வனத்துக்குள் அண்மையில் இளைஞன் ஒருவன் ஆஸ்ரமம் ஒன்று தனக்கு அமைத்துக் கொண்டு தனுர் வேதப் பயிற்சி அடைந்து வருகின்றான். அவன் பெற்றுள்ள திறமைகளெல்லாம் தங்களிடத்திருந்து வந்ததாக அவன் கூறுகிறான். இதோ பாருங்கள். நரமித்திரன் என்னும் இந்த நாய் அவனுடைய ஆஸ்ரமத்தண்டை சென்றது. வேற்றானாகிய அவனைப் பார்த்து இது குலைத்தது. நாய்க்குத் தீங்கு செய்யாது இதன் மீது அம்பு ஒன்றை அவன் எய்தான். இதற்குத் தீங்கு செய்யாது அந்த ஓர் அம்பு ஒரு கற்றை அம்பாக வடிவெடுத்து இதன் வாயை அடைத்துக் கொண்டது. அந்த விபரீத நிலையில் இது எங்களிடம் ஓடி வந்தது. இதைப் பின் தொடர்ந்து போய் அந்த ஆஸ்ரமத்தைக்கண்டு பிடித்தோம். அங்கு வசித்து வரும் இளைஞனோடு உரையாடினோம். மற்றோர் அம்பு எய்து நாயின் வாயிலிருந்த அம்புக் கற்றையை அவன் அகற்றி வைத்தான். இத்தகைய தனுர் வேத ரகசியம் ஒன்றும் எங்களுக்குத் தெரியாது. இதை யாரிடம் கற்றுக்கொண்டாய் என்று கேட்டோம்.தங்களிடமிருந்து கற்றுக்கொண்டதாக அவன் கூறுகின்றான். இதுதான்வியப்புகளுள் பெரியவியப்பாக இருக்கிறது.

**துரோணாச்சாரியர் :** வாருங்கள். இப்பொழுதே அந்த இளைஞனைச் சென்று சந்திப்போம். சந்தித்து உண்மையை உள்ளபடி அறிந்து கொள்ளுவோம்.

(போகிறார்கள்.)

## காட்சி 18.

துரோணர், அர்ஜுனன், அசுவத்தாமன் ஆகியவர்கள் ஏகலைவ்யனுடைய ஆஸ்ரமத்தினுள் பிரவேசிக்கிறார்கள். அவன் குருவை வரவேற்கிறான்.

**ஏகலைவ்யன் :** குருவே போற்றி! இறைவா போற்றி! அண்ணலே போற்றி! தேவா, தாங்கள் திருமேனி தாங்கி இந்த ஆஸ்ரமத்திற்கு இப்பொழுது எழுந்தருளியிருப்பதால் அடியேன் கிருதார்த்தனாயுள்ளேன். நான் பூண்டுள்ள இலட்சியம் இப்பொழுது பூர்த்தியாகிறது. சற்குருவே போற்றி, பரகுருவே போற்றி. அடியேனை ஆட்கொண்டுள்ள அண்ணலே போற்றி.

**துரோணாச்சாரியர் :** இளைஞா! நீ யார் என்பது எனக்கு விளங்கவில்லை.

**ஏகலைவ்யன் :** பிரபோ, பல ஆண்டுகளுக்கு முன்பு நான் தங்களை ஹஸ்தினாபுரத்தில் வந்து தரிசித்தேன். என் பெயர் ஏகலைவ்யன். என் தந்தையின் பெயர் வீரவர்மன். இப்பக்கங்களிலுள்ள வேடர்களுக்கு என் தந்தை வேந்தனாக இலங்குகின்றார். என்னைச் சிஷ்யனாக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று தங்கள் பாதங்களில் வீழ்ந்து வணங்கினேன். என் பிறப்பையும் தந்தையின் தொழிலையும் முன்னிட்டு என்னைச் சிஷ்யனாக ஏற்றுக்கொள்ள மறுத்தீர்கள். அதனால் நான் மனத்தளர்ச்சி அடையவில்லை. என் போக்கில் தங்களைக் குருவாக வைத்துக் கொள்ளுதலில் ஆட்சேபம் உள்ளதா என்று தங்களைக் கேட்டேன். அதற்கு யாருமே ஆட்சேபம்செய்யமாட்டார்கள் என்று தாங்கள் பகர்ந்தருளினீர்கள். அந்த அனுமதி எனக்குப் போதுமானதாயிற்று. அதன் விளைவாக நான் அனைத்தையும் அடையப்பெற்றவனாக இருக்கிறேன். தங்கள் அருளால் நான் விரும்பியுள்ள தனுர்வேத ஞானம் முழுவதும் அடையப் பெற்றவனாக இருக்கிறேன்.

சற்குருவே நம: பரகுருவே நம:

**துரோணாச்சாரியர் :** இப்பொழுதுதான் உன்னைப்பற்றிய ஞாபகம் எமக்கு வருகிறது. பல ஆண்டுகளுக்கு முன்பு நீ ஹஸ்தினாபுரத்திற்கு வந்து நம் சிஷ்யனாக விரும்பினாய். ஆனால் தக்க காரணங்களைக்கொண்டு உன்னைச் சிஷ்யனாக ஏற்க மறுத்து விட்டோம். பிறகு நீ இது பரியந்தம் என்ன செய்துள்ளாய்?

**ஏகலைவ்யன்:** குருதேவா, தாங்கள், என்னை ஏற்க மறுத்துவிட்டதை முன்னிட்டுத் தங்களுடைய சிஷ்யனாக வேண்டும் என்னும் விருப்பம் என்னை விட்டு அகலவில்லை. அது வளர்ந்து கொண்டேயிருக்கிறது. இந்த ஆஸ்ரமத்தில் துவக்கத்தில் தங்களுடைய விக்ரஹம் ஒன்று அமைத்து அதன் வாயிலாகத் தங்களுக்குப் பாஹிய பூஜை பண்ணி வந்தேன். நாள் ஏற

ஏற அது மானஸ பூஜையாக மாறிற்று. அல்லும் பகலும் தங்களுடைய பூஜையைத் தவிர வேறு எதையும் நான் அறிந்தவனல்லன். கனவிலும் நனவிலும் தாங்கள் சதா தனுர்வித்தை புகட்டி வருகிறீர்கள். ஹஸ்தினபுரத்தில் இருந்திருந்தால் பலர்க்கிடையில் நானும் ஒரு சிஷ்யனாக இருந்திருப்பேன். ஆனால் ஈண்டு அல்லும் பகலும் தாங்கள் எனக்காகவென்றே அலாதியாகப் பயிற்சி கொடுத்து வருகிறீர்கள். தனுர்வேதத்தின் மர்மங்களெல்லாம் படலம் படலமாகத் தங்கள் அருளால் என் உள்ளத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கின்றன. தங்கள் அருளால் இனி எனக்குக் குறையொன்றுமில்லை. யாண்டும் கலையின் நிறைவிலேயே நான் இன்புற்று இருக்கிறேன்.

துரோணாச்சாரியர்: அப்படியானால் எனக்குக் குருதக்ஷிணையாக எதைத் தருகிறாய்?

ஏகலைவ்யன்: பிரபோ, நான் பாக்கியவான். தாங்கள் தாமாகவே குரு தட்சிணையைப் பற்றிப் பேச்சைக் கிளப்பியதால் நான் கிருதார்த்தனாயிருக்கிறேன். என்னைச் சிஷ்யனாக ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள் என்பது பட்டவர்த்தனமாக வெளியாகிக் கொண்டிருக்கிறது. எனக்கு இது போதும். எனக்குக் குறை ஒன்றுமில்லை. இந்த ஜன்மத்தில் நான் அடைய வேண்டியதை அடைந்தாயிற்று. குரு தட்சிணையாக எதைத் தருகிறாய் என்று கேட்டுள்ளீர்கள். அப்படிக் கேட்டது போதாது. என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தங்களுக்கே ஒப்படைக்கின்றேன். யான் எனது என்பன இனி ஒன்றும் என்னிடத்து மிச்சமில்லை. பூரண ஆஹுதியாக என்னையும் என்னிடத்துள்ள யாவையும் தங்களுக்கு உரியனவாக்குகிறேன்.

துரோணாச்சாரியர்: குருபக்தியில் நீ உச்ச நிலையில் இருக்கின்றாய். உனக்கு மங்களம் உண்டாகுக. நான் வேண்டுவது மிகச் சிறியது. உன் வலக்கையின் கட்டை விரலை அம்பால் துண்டித்துக் குருதட்சிணையாக என் முன் வைக்க முடியுமானால் அந்த ஒரு செயலைச் செய். அதுவே எனக்குப் போதுமானது.

ஏகலைவ்யன்: குருவே நம: ஸத் குருவே நம: பரம குருவே நம: இவ்வளவுதானா! இதில் சிரமம் யாது உளது? தங்கள் அருளால் வாய்த்த வில் வித்தையின் சிறப்பை இதோ பாருங்கள்.

(அம்புஒன்றைஎடுத்துவானத்தில் எய்தான். அது சுழன்று வந்து எந்தக் கட்டைவிரலின் வல்லமையால் வெளிக்கிளம்பிற்றோ அதே கட்டை விரலைத் துண்டித்துத் தள்ளியது.)

ஏகலைவ்யன்: பிரபோ! தாங்கள் வேண்டுகிற கட்டை விரல் இப்பொழுது அருவருப்புக்குரிய மாமிசத் துண்டாக மாறிவிட்டது. இது போதாது. என் உயிரைக் கேளுங்கள். அதைத் தங்கள் திருவடியில் சமர்ப்பிக்கின்றேன்.

அர்ஜுனன்: ஆச்சாரியரே, இது அடாத செயல்! அடாத செயல்! இதை நான் ஒருபொழுதும் ஆமோதியேன். கலையின் வல்லமையைத் தாங்கள் முன்னணியில் வைக்கவில்லை. பிறப்பை முன்விட்டு வந்துள்ள கீழ்த்தரம் எனப்படுவதுதான் உங்கள் உள்ளத்தை உறுத்திக்கொண்டிருக்கிறது. சான்றோருக்கு இது அழகன்று. கீழ்ப்பிறப்பை அலட்சியப்படுத்தும் பாங்கில் மேலாம் கலையைப் பாழ்படுத்தினீர்கள். கட்டை விரலைக் கேட்பதின் வாயிலாக ஏகலைவ்யன் கலையைப் பாழாக்கினீர்கள். இதுவா குரு கிருபை!

துரோணர்: அர்ஜுனா, அவசரப்படாதே. ஏகலைவ்யனுடைய குரு பக்தி உங்கள் எல்லாருடைய குருபக்தியைவிட மேலானது என்பதையறிந்து நான் பரமானந்தம் அடைகிறேன். குருபக்தி குருவின் ஆதரிப்பைவிட மேலானது என்பதை ஏகலைவ்யன் வெளிப்படுத்தி உள்ளான். இவனுடைய ஒப்பற்ற கலைத்திறமை கண்ணபிரானுடைய போர்த்திட்டத்தில் இடம் பெறமாட்டாது. அதை அறிந்தே கட்டை விரலை வாங்குவதின் வாயிலாக அவனுடைய கலையைக் கலைத்துவிட்டேன். உயிரையே கொடுக்கத் துடித்துக்கொண்டிருப்பவனுக்குக் கட்டைவிரல் எம்மாத்திரம்! ஏகலைவ்யனுடைய குருபக்தியை உலகுக்குப் பிரகடனம் செய்தல் பொருட்டே இச்செயலில் நான் ஈடுபட்டுள்ளேன். குரு பக்திக்கு எடுத்துக்காட்டாக ஏகலைவ்யன் உலகில் என்றென்றும் புகழ் உடலில் வாழ்ந்திருப்பான். இது ஒப்பற்ற பேறு ஆகும். (எல்லாரும்) வாழ்க ஏகலைவ்யன்! ஓங்குக குருபக்தி!

(மூன்று தடவை) (முற்றும்)



அருள் அன்னை சாரதாதேவியார்

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் -112

659. सर्वाधारा ஸர்வாதாரா— அன்னை பராசக்தியிலிடத்திருந்து பிரபஞ்சம் முழுவதும் தோற்றத்துக்கு வந்துள்ளது. தன்னிடத்திருந்து தோற்றுவிக்கப்பட்டுள்ள ஜகத் முழுதுக்கும் தானே ஆதாரமாக இருக்கிறாள். ஜகத்தின் அமைப்பினின்றே அதற்குச் சான்று எடுத்துக் கொள்ளலாம். மூலப்பிரகிருதியாயிருக்கின்ற அம்பிகையினிடத்திருந்து ஆகாசம் தோற்றத்துக்கு வந்தது. ஆகாசத்தினின்று வாயு உருவெடுத்தது. வாயுவினின்று அக்னி பரிணமித்தது. அக்னியினின்று அப்பு அல்லது ஜலம் பிறப்பெடுத்தது. அப்பு பிருதிவி அல்லது மண்ணாகி மேலும் உருவாயிற்று. இந்த ஐந்து பூதங்களுள் ஆகாசமே எங்கும் நிறை பொருளாய் இருக்கிறது. அந்த ஆகாசமே ஏனைய நான்கு பூதங்களுக்கும் ஆதாரமாயிருக்கிறது. இது ஜடசக்தியின் பாங்கு. ஜடசக்தியாக வந்துள்ள அதே அம்பிகை சித்சக்தியாகவும் இலங்குகின்றாள். சித்சக்தி அல்லது பிரக்ஞானமாய் இருப்பது அவளுடைய யதார்த்த நிலை. ஏனைய நிலைகளுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. ஆனால் பிரக்ஞானம் இருந்தது இருந்தபடி இருக்கிறது. அதில் எவ்விதமான விகாரமும் வடிவெடுப்பதில்லை. அத்தகைய பிரக்ஞான சொரூபிணியாக அம்பிகை யாண்டும் இருந்துகொண்டு தன்னிடத்திருந்து உருவெடுத்துள்ள சராசரங்களனைத்துக்கும் அவள் ஆதாரமாக இலங்குகின்றாள்.

ஆதாரமாகவும் ஆதேயமாகவும் அமைந்துள்ள அவளிடத்து மற்றொரு மகிமை உள்ளது. ஒரு சான்றின் மூலமாக அதை விளக்குவோம். பூவுலகம் ஒரு தனி வியக்தி. அதனிடத்து மலைகளும், மடுவுகளும், நதிகளும், குளங்களும், சமுத்திரங்களும் மேகங்களும் வடிவெடுத்துள்ளன. அத்தனை வடிவங்களுக்கும் இருப்பிடமாய் இருப்பது மண்ணுலகம். மண்ணுலகினின்று வடிவெடுத்துள்ள இத்தனை விகாரங்களையும் மண்ணுலகமே தாங்கிக்கொண்டிருக்கிறது. மண்ணுலகம் ஆதாரம். மலை, மடுவு, நதி, கடல், மேகம் முதலியன ஆதேயங்கள். ஆதேயங்களாகிய அவையாவற்றையும் ஆதாரமாகிய பூமி தாங்கிக்கொண்டிருக்கிறது. அதே விதத்தில் தன்னிடத்திருந்து தோன்றி வந்துள்ள பிரபஞ்சம் முழுவதையும் அதனதன் நிலையில் அவள் கட்டிப் பிடித்துக் கொண்டிருக்கிறாள்.

மெய் எழுத்தின் மீது ஏறி உயிர் எழுத்துத் தன் பாங்கை விளக்கிக் கொண்டிருப்பது போன்று பிரபஞ்சம் என்னும் சரீரத்தை ஆதாரமாகக்கொண்டு அதனுள் ஊடுருவிப் பரவியிருந்து சித்சக்தி தன்னுடைய பாங்கை விளக்கிக் கொண்டிருக்கின்றாள். அக்காரணத்தை முன்னிட்டும் அவள் சர்வ ஆதாரா எனப் போற்றப்பெறுகிறாள்.

ஒவ்வொரு பிரளயத்துக்குப் பிறகு வருகிற சிருஷ்டி முன் இருந்ததினின்று மாறி இருக்கிறது. அது மாறி இருந்தாலும் அதனூடு மிளிர்கின்ற ஆத்ம சைதன்யம் மாறுபடாதிருக்கிறது. ஆதலால் சிருஷ்டிக்கிரமத்தில் பரம்பரையாக வந்து கொண்டிருக்கின்ற தாரா அல்லது தாரை ஆக அவள் இலங்கிக்கொண்டிருக்கிறாள்.

660. सुप्रतिष्ठा ஸுப்ரதிஷ்டா—ஜகத்துக்கு நல்ல அடிகோலலாக இருப்பவள் என்பது இதன் பொருள்.

கட்டுகின்ற வீடொன்று காற்றையும் மழையையும் சமாளித்துக்கொண்டு உறுதிபெற்றிருக்கவேண்டுமானால் அதற்கு அடிகோலல் அல்லது அஸ்திவாரம் மிகவும் முக்கியமானது. அடிமட்டத்தின் வலிவுக்கு ஏற்பக் கட்டுகிற வீட்டுக்கு உறுதிப்பாடு வருகிறது. அதே விதத்தில் பிரபஞ்சமாகக் கட்டப்பெற்றுள்ள பேராலயத்துக்கு மாறாத அஸ்திவாரமாக இருப்பவள் அன்னை பராசக்தி. அவளுடைய பேராற்றலை அடிப்படையாகக் கொண்டுள்ள அண்டங்கள் வேறு எதனாலும் அசைக்கப்படமாட்டா.

இருபது எழுத்துக்களைக் கொண்டுள்ள யாப்பு அமைப்பு ஒன்று உள்ளது. அந்த அமைப்புக்குச் சுப்ரதிஷ்டா என்னும் பெயர் தரப்பட்டிருக்கிறது. அத்தகைய சந்தஸ் வடிவினளாக இருப்பவள் அம்பிகை என்னும் பொருள் இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது.

661. सदसद्रूप धारिणी ஸத்அஸத்ரூப தாரிணீ—ஸத் அஸத்து ஆகிய இரண்டு வடி

வங்களையும் எடுத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஸத் என்பது மெய்ப்பொருள். அதற்குப் புறம்பாக இருப்பது அஸத் அல்லது வெறும் தோற்றம். எது ஒரு காலத்திலிருந்து மற்றொரு காலத்தில் இல்லாது போகிறதோ அது வெறும் தோற்றம். சான்று ஒன்று எடுத்துக் கொள்ளுவோம். சொப்பனத்தில் ஒரு மனிதன் ஏராளமாகச் செல்வம் பெறுகிறான். சொப்பன வேளையில் பணம் படைத்திருப்பது அவனுக்கு மெய்யாகத் தோன்றுகிறது. ஆனால் சொப்பனத்தினின்று விழித்துக்கொண்ட உடனே அந்தச் செல்வம் மாயமாக மறைந்து போகிறது. ஆதலால் அது அஸத். ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்தில் எது இல்லாது போகிறதோ அது அஸத். மானுடன் ஒருவனுக்கு ஒரு நாட்டில் ஏராளமாகப் பூ ஸ்திதி இருக்கிறது. அந்த நாட்டில் வசித்திருந்து அதைப் பயன்படுத்துமளவு அம்மனிதனுக்கு அது ஸத் அல்லது மெய்ப்பொருளாகிறது. ஆனால் மற்றொரு நாட்டிற்குச் சென்று அம்மனிதன் பொருளில்லாது தவிக்கிறபொழுது வேறு ஒரு நாட்டிலிருக்கும் பூ ஸ்திதி அவனுக்கு அஸத் அல்லது பொய்ப்பொருளாகிறது. எது ஒன்று ஓர் இடத்திலிருந்துகொண்டு மற்றோரிடத்தில் இல்லாது போகிறதோ அது பொய். மானுடன் ஒருவனுக்கு அவனுக்குத் தெரிந்த மற்றொருவன் செல்வத்தைத் தானமாக வழங்குகிறான். அதற்கு அவன் சொந்தம் பாராட்டுகிறபொழுது அது அவனுக்கு மெய்ப் பொருளாகிறது. மற்றொரு மனிதன் வந்து தனக்குரிய செல்வத்தை அவன் தானம் பண்ணி இருக்கிறான் என்று நிரூபித்துக்காட்டினால் தானம் பண்ணியவனுக்கும், தானத்தை ஏற்றவனுக்கும் அது பொருளற்றதாகப் போகிறது. ஆக ஒருகாரணத்தை முன்னிட்டுக் கைப்பொருளாகத் தென்படுவது மற்றொரு காரணத்தை முன்னிட்டு கைநழுவிப் போய்விடுமானால் அது மெய்ப்பொருளாகாது. இங்ஙனம் காலதேச வர்த்தமானத்தில் எது அடிபட்டுப்போகிறதோ அது அஸத். கால, தேச, வர்த்தமானத்தில் பாதிக்கப்படாது எது நிரந்தரமாக நிலைத்திருக்கிறதோ அது ஸத் பொருள்.

அன்னை பராசக்தியானவள் ஸத் அல்லது மெய்ப்பொருளாகிய பிரம்ம சொரூபமாகவும் இருக்கிறாள். பிரபஞ்சமானது கால தேச வர்த்தமானத்துக்கு உட்பட்டது. சிருஷ்டி காலத்தில் பிரபஞ்சம் இருக்கிறது. பிரளய காலத்தில் அது ஒடுங்கிப்போகிறது. ஒடுங்கிப்போன பிரபஞ்சத்தில் இடமில்லை, வர்த்தமானமில்லை. ஆகையால் அது அஸத். அஸத்தாக இலங்குகிற மாயப்பிரபஞ்சமாகவும் அம்பிகை இலங்குகின்றாள். இதுவே அவளுடைய மகிமையாகிறது. யாண்டும் நிலைபேறுடைய பிரம்ம சொரூபமாகவும் அன்னை பராசக்தி மிளிர்கின்றாள். கால, தேச, வர்த்தமானமாக இருக்கின்ற பிரபஞ்சமயமாகவும் அவள் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கின்றாள். ஆதலால் அவளை ஸத் என்று சொல்லுவதா அல்லது அஸத் என்று புறக்கணிப்பதா? அவள் ஸத் ஆகவும் இருக்கின்றாள் அஸத் ஆகவும் இருக்கின்றாள். சொல்லால் விளக்க முடியாதவளாகவுமிருக்கின்றாள். ஆதலால் அவளை அநிர்வசனீயம் என்று இயம்பலாம்.

இம்மாயப் பிரபஞ்சம் நிலைபெற்றிருக்கும் பரியந்தம் உபசாரத்துக்காக இதை ஸத் என்று நாம் வைத்துக்கொள்ளலாம். அத்தகைய நிலவுலகிலே இருண்டு வருகிற நேரத்தில் மானுடன் ஒருவன் வனாந்திரப்பக்கம் நடந்துபோனான். திருடன் ஒருவன் வழியண்டையில் நின்றுகொண்டிருந்ததாகக் கருதி அம்மனிதன் ஓட்டம் பிடித்தான். அவனுக்குப் பிறகு திருடன் ஒருவன் அதே வழியில் வந்தான். ஆங்கு நிற்பவன் போலீஸ்காரன் என்று கருதி அவனும் ஓட்டம் பிடித்தான். அதன் பிறகு நான்கு போலீஸ்காரர்கள் வந்தார்கள். அங்கு நிற்பவன் திருடன் என்று பிடிப்பதற்குப் போனபொழுது அது ஒரு மரக்கட்டை என்று அறியலாயினர். ஒரே மரக்கட்டை வெவ்வேறு மனிதர்களுக்கு வெவ்வேறு காட்சிகள் கொடுத்தது. மரக்கட்டைதான் மெய். வெவ்வேறு மனிதர்களாகக் கற்பனை பண்ணியது பொய். பிரபஞ்சப் பொருள்கள் திரிவுபட்ட வேறு பல பொருள்களாகத் தென்படுகின்ற மாயா சக்தியை அன்னை படைத்திருக்கிறாள். ஆதலால் இந்தப் பிரபஞ்சத்திலேயே மாயா ஸத் ஆகவும் மாயா அஸத் ஆகவும் அன்னை தன்னைக் காட்டிக்கொண்டிருக்கிறாள்.

# வாழாத நெஞ்சம்

( சுவாமி ஆத்மானந்தர் )

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன்
பல்காலும்
வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே.

'ஆயுதம் இல்லாதவன் அரை மனிதன்' என்பது பழமொழி. போர் செய்யப் பயன்படும் கருவிகள்தாம் ஆயுதங்கள் என்று எண்ணிவிடலாகாது. கருவிகளனைத்துமே ஆயுதங்கள் தாம். காரியங்கள் செய்வதற்குக் கருவிகள் இன்றியமையாதன. உலக வாழ்வு கர்ம மயமாக இருக்கின்றது. இயற்கை முழுதும் கர்ம சொரூபம். மானுட வாழ்வும் கர்ம மயமாகத் தான் இருக்கின்றது. மனிதனை உயர்த்துவதும், தாழ்த்துவதும் அவன் புரிகின்ற கர்மங்களேயாம்.

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்

என்பது மறைமொழி.

மனிதன் தன்னிடத்துள்ள மூன்று கரணங்களைக்கொண்டு காரியங்களைச் செய்து வருகின்றான். மனம், மொழி, மெய் என்பன முக்கரணங்களாம். மனம் என்னும் கருவிதான் மானுட வாழ்வுக்கே வடிவு கொடுக்க வல்லதாக இருக்கிறது. மொழி, மெய் ஆகியவைகளை இயக்க வல்லதும் மனமேயாம். மொழியும், மெய்யும் மனத்தின் துணைக் கருவிகளேயாம். மனத்தின் செயல் செம்மை அடைவதற்கு ஏற்ப மொழியின் செயலும், மெய்யின் செயலும் செம்மை அடைந்து விடுகின்றன. மனத்தைச் செம்மைப்படுத்துவதுதான் நாம் புரிகின்ற ஆத்மசாதனையாகும். சமய சாதனைகளெல்லாம் மனத்தைச் செம்மைப்படுத்துவதற்கு உற்ற உபாயங்களேயாம்.

'மனமது செம்மையானால் மந்திரம் ஜபிக்க வேண்டாம்' என்பது ஆன்றோர் வாக்கு. ஆயினும் மனச் செம்மை உற்றோரும் மந்திர ஜபத்தை விட்டு விடுவதில்லை. அவர்கள் தங்கள் பொருட்டு அல்லாவிடினும் ஏனையோர் பொருட்டு மந்திர ஜபத்தைச் செய்துகொண்டே இருக்கின்றனர். அன்னை சாரதா தேவியார் தினந்தோறும் இலட்சக்கணக்கில் மந்திரஜபம் செய்து வந்தார். அவரிடத்து, 'நீங்கள் அடைய வேண்டியதை அடைந்தாயிற்றே, மீண்டும் இடையறாது மந்திரஜபம் செய்வானேன்?' என்று கேட்டபொழுது, 'ஜபம் செய்து புதிதாக நான் அடைய வேண்டியது ஒன்றுமில்லை தான். ஆனால் என்னுடைய குழந்தைகள் பலப் பல அலுவல்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றனர். அவர்களுக்கு மந்திரஜபம் சொல்லுவதற்குக் கூட நேரமில்லை. அவர்களுக்காக நான் மந்திரம் ஜபிக்கிறேன்' என்றார்.

இறைவனது நாமத்தை ஜபிப்பதில் ஒரு சுவை இருக்கிறது. அதை 'நாமோருசி' என்று கூறுவார்கள். அந்த ருசியை அறிந்தவர்கள் அதைச் சுவைக்கத்தான் விரும்புவர். நாம ஜபத்தை சுவைத்துப் பழகிய நா அதை விடவே விடாது. 'நற்றவா, உனை நான் மறக்கினும் சொல்லு நா நமச்சிவாயவே' என்று நாம ஜபத்தை விட்டு விடா நிலையைச் சுந்தரர் கூறுகின்றார்.

'மனம் போல வாழ்வு' என்பது மாறாத நியதி. 'மனம் போல மாங்கல்யம்' என்றும் கூறுவர். இதனையே வள்ளுவரும் "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம் உள்ளத் தனைய துயர்வு" என்று கூறியுள்ளார். மனிதனை மேன் மகனாக்குவதும், கீழ்மகனாக்குவதும் அவனது மனமேயாம். நம்மை உயர் நிலைக்கு எடுப்பதும், கீழ்நிலைக்குத் தாழ்த்துவதும் நமது மனமேயாம். நம்மை உயர்த்திக் கொள்ளுவதும், தாழ்த்திக் கொள்ளுவதும் நம் கைவசத்திலேயே இருக்கிறது. பிறர் யாராலும் நம்மை உயர்த்தவோ, தாழ்த்தவோ இயலாது. நம்மை நாமே உயர்த்திக் கொள்ள வேண்டும். கிருஷ்ண பரமாத்மா பகர்வதாவது:

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥

உத்தரேதாத்மனாத்மானம் நாத்மானமவஸாதயேத் ।
ஆத்மைவ ஹ்யாத்மனோ பந்துராத்மைவ
ரிபுராத்மன: ॥

'தன்னைத் தன்னாலே உயர்த்திக்கொள்க. தன்னை இழிவுறுத்தலாகாது. ஏனென்றால்

தானே தனக்கு நன்பன்; தானே தனக்குப் பகைவன்.'

'நல்நிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழ் இடு வானும் நிலையினும்
மேல்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் நான்'

என்பது நாலடியார்.

எல்லாவகை முன்னேற்றத்திற்கும் மனத்தின் துணை இன்றியமையாதது. ஆத்ம சாதனைக்கோ அதன் துணை மிகமிக இன்றியமையாததாகும். மனத்தின் துணையில்லாதவிடத்து நாம் ஆத்மசாதனத்தில் முன்னேற்றமடைய முடியாது. இறைவன் கிருபை இருந்தாலும், குருவின் கிருபை இருந்தாலும், நமது மனத்தின் கிருபை இல்லையெனில் நாம் சாதனத்தில் முன்னேற்றமடைய முடியாது. இறைவன் கிருபை யாண்டும் இருந்துகொண்டிருக்கிறது. இறைவனது கருணைக்கு ஈடு இணையே கிடையாது. அவர் கருணைக் கடலாக இருக்கின்ருர். அன்னை பராசக்திக்கு அமைந்த ஆயிரம் திருநாமங்களுள் கருணாரஸ சாகரா என்பதும் ஒன்று. குருவின் கிருபையைப் பற்றி மாந்தர் கவலைப்படவேண்டியதில்லை. மாந்தர் எல்லாருக்கும் குரு வந்து வாய்ப்பது அரிதாகும். இறைவனையே குருவாகக்கொள்ளுதலில் குற்றம் ஒன்றுமில்லை. சாதகனுக்கு மனத்தின் துணைதான் இன்றியமையாதது. நமது இலட்சியத்தில் நமக்கு ஈடுபாடு இருக்கவேண்டும். நம்மோடு அது ஒத்துழைக்கவேண்டும். இறையருளைப் பெறுவதில் மனம் தீவிர நாட்டம் கொள்ளவேண்டும். மனம் முழுதும் ஒத்துழைத்தால் இறையருளை இந்த ஜன்மத்திலேயே பெற்றுவிடலாம். பகவான் ராமகிருஷ்ணர் இதை ஒரு உபதேசத்தின் மூலம் விளக்குகின்ருர். 'ஈசன் அருள் என்னும் காற்று ஓயாது வீசிக்கொண்டிருக்கிறது. உனது மனம் ஆகிய பாயை விரித்துக் கட்டு. அப்பொழுது ஈசன் அருளுக்குப் பாத்திரம் ஆவாய்' என்று கூறுகிருர். இறையருளாகிய காற்றை நோக்கி நமது மனமாகிய பாயை விரித்துக் கட்டவேண்டும். அப்பொழுது நமது வாழ்வாம் தோணி, முக்தியாம் கரையைச் சென்றடையும் என்பதில் ஐயமில்லை.

மானுட வாழ்க்கையின் உயர்ந்த இலட்சியம் ஈசனை அடைதல். ஈசுவர ஆராதனைக்கென்றே இப்பிறவி தோன்றி இருக்கிறது. இந்தப் பிறவியை நாம் மதிக்கவேண்டும். ஈசனை வழுத்துதற்கே இதைப் பயன்படுத்தவேண்டும். அவனது திருவடித் தொண்டினுக்கே இதனை அர்ப்பணித்து விடவேண்டும்.

'வாய்த்தது நந்தமக் கீதோர் பிறவி மதித்திடுமின்
பார்த்தற்குப் பாசு பதமருள் செய்தவன் பத்தருள்ளீர்
கோத்தன்று முப்புரந் தீவளைத்தான் தில்லையம்பலத்துக்
கூத்தனுக் காட்பட் டிருப்பதன்றோ நந்தங் கடமையே'

என்பது அப்பர் திருவாக்கு. 'மனிதனுகப் பிறந்தவன் இப்பிறவியிலேயே ஈசுவரனை அடைய முயலவேண்டும். இல்லையேல் அவன் வீணில் பிறந்தவனேயாம்' என்பது ஸ்ரீ ராமகிருஷ்ணரது திருவாக்கு.

ஐம்பொறிகளை நாம் பெற்றுள்ளோம். ஐம்பொறிகளும் நாம் பெற்றுள்ள ஐந்து கருவிகளாகும். ஒரு பொறி செய்கின்ற செயலை இன்னெரு பொறி செய்யாது. கண்ணின் செயலைக் காதோ, காதின் செயலைக் கண்ணே செய்யாது. அதே போன்றுதான் ஏனையவைகளும். கண் காணப் பயன்படுகின்றது; காது கேட்கப் பயன்படுகின்றது; மூக்கு மோப்பப் பயன்படுகின்றது; நாக்கு சுவைக்கப் பயன்படுகின்றது. கண் காணப்பயன்படவில்லையாயின், அது இருப்பதும் இல்லாததும் ஒன்றுதான். கண் இருந்தும் காணவியலாத மனிதனைக் குருடன் என்கின்ரேம். காது கேட்கப் பயன்படவேண்டும். காது இருந்தும் கேட்கப்பயன்படவில்லையாயின் அது இருப்பதும் இல்லாததும் ஒன்றேயாம். காது இருந்தும் கேளாத மனிதனைச் செவிடன் என்கின்ரேம். கண்ணுக்கும் காதுக்கும் ஏனைய பொறிகளுக்கும் தனித்தனி செயல்கள் இருப்பது போன்று தலைக்கும் அதற்கான செயலொன்றுண்டு. எண்சாண் உடம்பிற்குத் தலையே பிரதானம். மற்ற உறுப்புக்களின் செயல்கள் அனைத்தையும்விடத் தலையின் செயலே பிரதானமானது. இறைவணக்கம் தான் தலையின் பிரதானமான செயலாகிறது. இறைவணக்கத்துக்கென்றே ஏற்பட்டது தலை. 'வணங்கத் தலை வைத்து' என்கிருர் மணிவாச

கர். ஈசனை வணங்கப்பயன்படாத தலை;காணப் பயன்படாத கண்போன்றும்; கேட்கப் பயன் படாத செவி போன்றும் பயனற்றதாய்ப்போய் விடுகின்றது.

கோளில் பொறியில் குணமிலவே
எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

என்பது மறைமொழி.

மானுடவாழ்வு அநித்தியமானது. மனித னுக்கு மரணம் எப்பொழுது வேண்டுமாயினும் வரலாம். எந்த இடத்தில் வேண்டுமாயினும் வரலாம்; எந்தச் செயலில் ஈடுபட்டுக்கொண் டிருக்கும்போதும் வரலாம். மரணத்தைக் குறித்து எல்லா உயிர்களுமே அஞ்சுகின்றன. எந்த உயிரேனும் மரணத்தை விரும்புகின் றதா?எந்த மனிதனுயினும் மரணத்தை விரும்பு கின்ருனு? எந்தவுயிரும் எந்த மனிதனும் மர ணத்தை விரும்பி வரவேற்பது கிடையாது. மரணத்தினின்று விடுபடுவது நமது வாழ்வின் நோக்கம். மரணமிலாப் பெருநிலையை அடை வதுதான் நமது குறிக்கோளாகும். பிறவிப் பெருங்கடலைத் தாண்டுவதற்கு இறைவன் திருவடியைச் சார்ந்திருப்பதே உற்ற உபாய மாகும்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்

என்பது மறைமொழி. இறைவன் அடிசேர்தல் என்பது சதா தெய்வச் சிந்தனையில் ஊறியிருத் தலாகும். மனிதன் எதனைச் சிந்திக்கின்ருனே அதன் மயமாகின்ருன். சிந்தனைக்குக் கருவி யாய் இருப்பது நெஞ்சம். தெய்வச் சிந்தனை யில் ஊறியிருக்கும் நெஞ்சம் அழிவற்ற பேரின்ப வாழ்க்கைக்குத் தகுதியுடையதாகின் றது. உலகச் சிந்தனையில் ஊறிக்கிடக்கும் மனம் சிற்றின்ப வயப்பட்டு அழிந்தொழிகின் றது. மனிதன் பேரின்பப் பேற்றைப் பெறுதற் கும், சிற்றின்பச் சேற்றில் அழுந்துதற்கும் நெஞ்சமே காரணமாகும். மனிதனுடைய விடு தலைக்கும் பந்தத்திற்கும் நெஞ்சமே காரண மாகும். விடுதலையை நாடாத மனிதன் இறந்த வனுக்கொப்பாகின்ருன். தெய்வத்தை நினை யாத நெஞ்சம் பயனற்றதாகின்றது. அத் தகைய பயனற்ற நெஞ்சினல் பயனேதும் இல்லை. உயரிய பேரின்ப வாழ்க்கைக்குப் பயன்படாத நெஞ்சத்தைக் குறித்து "வாழாத நெஞ்சமே" என்று அழைக்கின்ருர்.

நெஞ்சம் தெய்வத்தை நினைக்காவிடினும் உயர்ந்த எண்ணங்களிலாவது ஊறியிருக்கிறதா என்ருல் அதுவுமில்லை. கீழ்மையை நாடித்திரி வதுதான் நெஞ்சத்தின் பாங்கு. விடுதலையை நாடாவிடினும் உலகபந்தபாசத்திலாவது அழுந் தாமல் இருக்கிறதா என்ருல் அதுவுமில்லை. நன்மை செய்யாவிடினும்,தீமையாவது செய்யா மல் இருக்கிறதா என்ருல் அதுவும் இல்லை. விடுதலையை நாடாத நெஞ்சு பந்தத்தில் அழுந்துவதைப் பார்த்து இத்தகைய நெஞ்சம் இருப்பதைவிட இல்லாமல் அழிந்தொழிவது நல்லது என்ற கருத்தில் "வாழ்கின்ருய்" என இரங்கிக் கூறுகின்ருர். காணுத கண், கேளாத செவி, வணங்காத தலை என்பன போலத் தெய் வத்தை நினையாத நெஞ்சு—வாழாத நெஞ்சா கின்றது. அத்தகைய நெஞ்சம் இருப்பதைவிட இல்லாதிருப்பது மேல் என்ற கருத்துப்பட 'வாழ்கின்ருய் வாழாத நெஞ்சமே' என்கின்ருர்.

தெய்வத்தை நினையாத நெஞ்சு இருப்பத ஞல் மேலும் மேலும் வினைப்பெருக்கும் பந்த பாசமும்தான் அதிகரிக்கும்.

வல்வினை மெல்வினை என்று வினையை இரு வகைப்படுத்தலாம். இங்கு வல்வினை என் றது கொடிய தீவினையாகும். ஆற்றல் மிக்க தீவினையானது அதன் பயனைத் தரும்பொழுது அதனை எதனுலும் தடுத்து நிறுத்தவொண் ணுது. அவனவன் வினையை அவனவன் அனு பவித்தேயாக வேண்டும். வினை கொடியதா யின் அது செய்தவனது உயிரையே பறிக்க வல்லதாகும். பாண்டிய மன்னன் கள்வன் என்று குற்றம் சாட்டிக் கோவலனைக் கொன்று விடுகின்ருன். கோவலன் நிரபராதி. அவனைக் கொன்றது மிகப்பெரிய கொடுமையாகும். கணவனை இழந்த கற்புக்கரசி கண்ணகி கதறி யழுதாள். தன் கணவன் கள்வனல்லன் என் பதை அரசவையில் நிரூபித்து விடுகின்ருள். உண்மையை அறிந்த அரசன் "யானே அரசன் யானே கள்வன்! மன்பதைக் காக்கும் தென் புலங்காவல் என்முதல் பிழைத்தது,கெடுக என் ஆயுள்!" என்று கூறிச் சிம்மாசனத்திலிருந்து விழுந்து உயிரை விட்டுவிடுகிருன். ஆனல் அவனது உயிர் வளைந்த செங்கோலை நிமிர்த்தி

விட்டது என்கிறார் இளங்கோவடிகள். "வல்வினை வளைத்தகோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது" என்கின்றார். வலிய வினையின் பயனைப் பாண்டியன் உயிரைக் கொடுத்துத் தடைப்படுத்தினன் என்று கூறுவதனால், உடலினின்றும் உயிரைப் பிரிக்கும் அத்துணை ஆற்றல் கொடிய தீவினைக்கு உண்டு என்பது இதனால் புலப்படுகின்றது.

மனிதன் செய்கின்ற வினையை நல்வினை தீவினை என்று இருவகையாகப் பாகுபடுத்தலாம். மனிதன் தான் பெற்றுள்ள இயல்பிற்கேற்ப வினையாற்றுகின்றான். நல்லியல்புடைய மனிதன் நல்வினையாற்றுகின்றான். அதன்பயனாக இன்பத்தை அனுபவிக்கின்றான். புல்லிய இயல்புடைய மனிதன் தீவினையைச் செய்கின்றான். அதன் பயனாகத் துன்பத்துக்கு உள்ளாகின்றான். துன்பத்துக்கு ஏதுவாகிய தீவினையைச் செய்துவிட்டு, நல்வினைப்பயனாகிய இன்பத்தை நாடுவது புல்லிய இயல்புடைய மாந்தரது போக்காகும். தீவினையைச் செய்துவிட்டு, நல்வினைப்பயனை எதிர்பார்ப்பது, விஷத்தை அருந்திவிட்டு அமுதத்தை அருந்தியதின் பயனை அடைய விரும்புதலைப் போன்றதாகும். தீவினை துன்பம் தரும் என்பதைத் தெரிந்தும் கீழ்மக்கள் ஏன் தீமை புரிகின்றனர்? செய்கின்ற வினையின் பயனை அவர்கள் எண்ணிப் பார்ப்பது இல்லை. ஆத்திரத்தினாலோ, கோபத்தினாலோ தூண்டப்பட்டுப் பிறர்க்குத் துன்பம் செய்கையில்,

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்

என்னும் மறைமொழியின் கருத்தை அவர்கள் எண்ணிப்பார்ப்பதில்லை. வினைப்பயனை எண்ணிப்பார்ப்போர் தீவினையைச் செய்யார். அன்னவர் தீவினை செய்வதற்கு அஞ்சுவர். உலகிற்கு நாம் எதை எடுத்து வழங்குகின்றோமோ, அதையே உலகத்தினின்று திரும்பப் பெறுகின்றோம். உலகிற்கு நலம் செய்வதென்பது நமக்கு நாமே நலம் செய்து கொள்வதாகும். உலகிற்குத் தீமை செய்வது நமக்கு நாமே தீமை செய்து கொள்வதாகும். இவ்வுண்மையை உணராதவர் பிறர்க்குத் தீங்கு செய்ய முற்படுகின்றனர். தீவினைப் பயனால் வரும் பெருந்துன்பத்தையும் பொருட்படுத்தாமல் கொடிய தீவினையை மேற்கொண்டு அதன்கண் அழுந்திக்கிடக்க முற்படுகின்றனர். மனித நெஞ்சத்தின் அறியாமையை என்னென்பது! மனித நெஞ்சத்தின் இந்த அவல நிலையைப் புலப்படுத்த 'வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்' என்கின்றார்.

மானுடப் பிறப்பு வினையினால் வந்தது. "வினைப்போகமே ஒரு தேகம் கண்டாய்" என்பது ஆன்றோர் வாக்கு. பல ஜன்மாந்திரங்களில் சேர்த்து வைத்த வினையானது நம்மைப் பந்தத்தில் ஆழ்த்துகிறது. அதில் இருந்து விடுபடுவதற்கு இறைவன் தாளை வணங்குவதை விட வேறு வழி கிடையாது. கடவுள் சிந்தனை நெஞ்சத்தில் வலுப்படும் அளவு பழவினையினின்று நாம் விடுபடுகின்றோம்.

இருவினைப்பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத் தரசை இக்கடல்
ஒரு கல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?

என்பது பெரிய புராணப்பாடல். வினையை நாம் புறக்கணிக்க இயலாது. நாம் செய்கின்ற வினைகள் அனைத்துமே அவைகளின் பலனைத் தராமலும் இரா. நாம் செய்கின்ற வினை ஒவ்வொன்றும் நம்மைக் கட்டுப்படுத்தும். உலகில் வினையாற்றாது இருக்க முடியாது.

"வினையே ஆடவர்க்குயிரே" என்பது கோட்பாடு. மனிதன் ஓயாது வினையாற்ற வேண்டும். அதற்கிடையில் வினைப்பயனில் கட்டுண்ணாதும் இருக்கவேண்டும். அதற்குரிய உபாயம் யாது? செய்கின்ற வினைகளையெல்லாம் ஈசனுக்கு அர்ப்பணித்து விடவேண்டும். பகவானுக்கு என்றே நாம் பணி புரியவேண்டும். நமக்கென்று எந்தப் பணியும் செய்யலாகாது. அனைத்தையும் ஈசனுக்கென்றே அர்ப்பணித்து விடவேண்டும். செயல்கள் அனைத்தையுமே ஈசனுக்கு அர்ப்பணிக்க வேண்டுமாயின், நம்மிடத்துக் கடவுள் பக்தி ஓங்கவேண்டும். பக்தி ஓங்கும் பொழுது பக்தன் தன்னை முற்றிலும் தான் வழிபடுகின்ற தெய்வத்தினிடத்து ஒப்படைத்து விடுகின்றான். வாழ்க்கையில் இன்பதுன்பம் எது வந்தாலும் எல்லாம் இறைவன் செயல் என்று ஏற்றுக்கொள்கின்றான்.

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்

கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ
எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே

என்பது மணிவாசகரது திருவாக்கு. துன்ப துயரங்களைக்கண்டு பக்தன் சோர்வு அடைவது இல்லை. அவன் தன்னை அடியோடு வென்று விடுகின்றான். தன்னிடத்துள்ள அன்பை மேலும் மேலும் வளரச் செய்து அதை எல்லையற்றது ஆக்கிவிடுகின்றான். தன்னிதயத்து ஓங்கி வளர்ந்த அன்புப் பெருக்கைக் கடல்மடை திறந்தால்போன்று ஈசன் திருவடியினிடத்துச் செலுத்துகின்றான். ஈசன் திருவடிக்கே அன்பு பூண்ட அப்பக்தன் பழவினைகள் எல்லாம் அடியோடு நாசமாகிவிடுகின்றன. தொல்லையைத் தருகின்ற வல்வினைத் துவந்தங்கள் எல்லாம் தூர விலகிச் செல்லுகின்றன. இவ்வுண்மையை அப்பரது திருவாக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செய்யும்
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனுர்க்கு
எல்லை யில்லாதோ ரடிமைபூண் டேனுக்கே.

திருநாவுக்கரசரது பெருவாழ்வே இத்திருப் பாடலுக்கு விளக்கமாகும். எத்துணை எத்துணைத் துன்ப துயரங்களுக்கு அவர் உள்ளானார். ஆனால் ஈசன் திருநாமத்தையும் அவனது திருவடிக்கு அன்புத் தொண்டு செய்தலையுமே துணையாகக் கொண்டு துன்ப துயரங்கள் அனைத்தினின்றும் விடுபட்டார். அந்த அனுபவம் தான் மேற்கூறிய பாடலாக வடிவெடுத்திருக்கின்றது. ஆக, வினையினின்று விடுபடுதற்கு ஈசனை வழுத்துதலையும் வாழ்த்துதலையும் தவிர வேறுவழி கிடையாது. வல்வினைப் பெருக்காம் கடலில் மூழ்கும் ஆன்மாக்களை மூழ்காது காப்பாற்றும் தோணி போன்றவன் அவன்தான். அங்ஙனம் கரையேற்றி ஆட்கொள்ளும் பெருமானை நினைந்து நெஞ்சமே, நீ முறையிடவில்லை என்பதை எடுத்துக் காட்ட "ஆழாமற் காப்பானை ஏத்தாது" என்கின்றார். ஈசனை வழுத்தாமையே கேடு தேடிக்கொண்டதாகும். மனிதனாகப் பிறந்தவன் செய்யவேண்டிய மிக முக்கியமானவற்றைச் செய்யாமலும்; செய்யத் தகாதவைகளைச் செய்வதாலும் கேடு தேடிக் கொள்ளுகின்றான்.

"செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்"

என்பது மறைமொழி. இங்கே "வல்வினைப் பட்டு ஆழ்தல்" செய்தக்க அல்ல செய்தலும்; "ஆழாமற் காப்பானை ஏத்தாமை" செய்தக்க செய்யாமையும் ஆகின்றது. ஆகையால் இரண்டு வகையாலும் கேடு தேடிக் கொள்ளுகின்றாய் என்பதைப் புலப்படுத்த "சூழ்கின்றாய் கேடு உனக்கு" என்கிறார்.

சாதனத்துக்கு விவேகம் இன்றியமையாதது. விவேகம் இல்லாதவிடத்துச் சாதனத்தில் முன்னேற்றமடைய முடியாது. கீழ்மையை நாடிச் செல்லுவது மனத்தின் இயல்பு. பலப்பல ஜன்மாந்திரங்களில் அது சிற்றின்பத்திலேயே திளைத்திருக்கின்றது. பேரின்பத்தை நாடுதற்கு அது எளிதில் ஒருப்படாது. நம்மோடு ஒத்துழைக்கவும் செய்யாது. நாம் தெய்வத்தை நினைக்கத் தொடங்கினால், உடனே அது உலகத்தை நினைக்கத் தொடங்கும். உலகை மறக்க முயன்றால் அப்போதுதான் அது தீவிரமாக உலகை நினைக்க முற்படும். நாம் விரும்புவதை அது நாடாது. அதற்கு மாறாகத் தான் விரும்புவதைத்தான் அது நாடிச் செல்லும். சாதனத்தில் மனப்போராட்டம் தான் மிகப் பெரிய போராட்டமாகும். மனதோடு புரிகின்ற யுத்தம்தான் மாபெரும் யுத்தமாகும். புறவுலகப்போரில் மிகப் பெரும் வெற்றி பெற்ற மாவீரர்களும் அகவுலகப் போரில் படுதோல்வி அடைந்திருக்கின்றனர். இராவணன் அதற்கு மிகப் பெரிய எடுத்துக்காட்டாவான். அதனால் தான் 'புலனைந்தும் வென்றான்தன் வீரமே வீரம்' என்றும்; 'தன்னைத் தான் வெல்லுதலே வெற்றிகளிலெல்லாம் மாபெரும் வெற்றி யென்றும்' சான்றோர் கூறியுள்ளனர். தீமையை நாடியோடும் நெஞ்சிற்கு ஓயாது இடித்துரைக்க வேண்டும். பொய்மையை நாடிப் போகும் நெஞ்சிற்கு இடையறாது புத்திபுகட்ட வேண்டும். அப்படி மனதைத் தன் போக்கில் போகவிடாது நன்னெறியின்கண் இட்டுச் செல்லுவதுதான் அறிவுடைமையாகும்.

"சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு

என்பது மறைமொழி. எவ்வளவு தடவை எடுத்துரைத்தாலும் மனம் கேட்காது. ஜன் மாந்தர வாசனையானது அதைப்புலன் வழியேதான் இழுத்துச் செல்லும். மன தின் இந்த இழிநிலையைக் குறித்து அப்பர் சுவாமிகள்,

"உழுத சால்வழியேயுழு வான்பொருட்டு
இழுதை நெஞ்சமி தெனப்படுகின்றதே"

என்கிறார்.

சத்துவ குணம் பொருந்திய தெய்வாம்சம் மிக்க மனம் ஒருமுறை சொன்னாலே கேட்டுக் கொள்ளும். ரஜோகுணம் பொருந்திய அசுர மனமோ திரும்பத் திரும்பச் சொன்னால்தான் கேட்கும். தமோகுணம் பொருந்திய விலங்கு மனமோ பன்முறை சொன்னாலும் கேளாது. சாம, பேத, தான, தண்டத்தில் இறுதியான தண்டோபாயந்தான் அதற்கு உற்ற உபாய மாகும். மானுடருள் பெரும்பாலோர் விலங்கு மனம் படைத்தவர்களாகத்தான் இருக்கின்ற னர். சட்டதிட்டங்களும், ஆன்றோரது அற வுரைகளும் அவர்களிடத்தும் பயன்படுவ தில்லை. தண்டத்தைப் பிரயோகித்துத்தான் அவர்களைச் சரிப்படுத்தவேண்டி யிருக்கிறது. இயற்கை அன்னை துன்ப துயரங்களாம் தண்டோபாயத்தைப் பயன்படுத்திச் சிறுகச் சிறுக அவர்களது நெஞ்சத்தைத் திருத்தி யமைக்கின்றாள். 'அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்' என்பார்கள். இந்த உண் மையை மனதில் வைத்துக்கொண்டு திரும்பத் திரும்ப எச்சரித்துத்தான் மக்களை நல்வழிப் படுத்தவேண்டும். நமது மனதையும் சிறுகச் சிறுகத்தான் செம்மைப்படுத்தவேண்டும். மனம் தீவினையில் திளைக்க முற்படும்பொழுதெல் லாம் அதற்கு எச்சரிக்கை செய்து இடித் துரைக்க வேண்டும். அப்படிப் பன்முறை எச்சரிக்கை செய்தும் தன் மனம் நன்னெறிப் படவில்லையே என்று நொந்துகொள்ளுகின்ற பாங்கில் "உனக்குச் சொல்கின்றேன் பல் காலும்" என்கின்றார். "தட்டிக் கேட்க ஆளில்லாவிட்டால் தம்பி சண்டபிரசண்டன்" என்பார்கள். நாட்டை ஆளுகின்ற அரசனுயி லும் அவனுக்கும் நல்வழிகாட்ட ஒரு மந்திரி தேவை. மன்னனை நன்னெறியின் கண் இட் டுச் செல்லுபவன்தான் சிறந்த மந்திரியாவான். தவறு செய்யும் மன்னனை இடித்துரைத்துத் திருத்துபவன்தான் தலையாய மந்திரியாவான். அங்ஙனம் இடித்துரைக்கும் துணைவரைப் பெறுத அரசன் தனக்குத்தானே கேட்டை வர வழைத்துக்கொள்வான்.

"இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்"

என்பது மறைமொழி. மன்னர்க்கு மந்திரி போன்று மனதுக்கு மந்திரியாக இருப்பது விவேகம் அல்லது மனச்சாட்சி. மனது தவறு செய்யும்போதெலாம் விவேகம் இடித்துரைக்க வேண்டும். திரும்பத் திரும்ப இடித்துரைத் தும் மனம் கேட்காதபோதும் சோர்வடைந்து விட்டுவிடலாகாது. அப்படி விட்டுவிடாது திரும்பச்சொல்லி வருகிறேன் என்பதுதோன்ற "சொல்கின்றேன்" என்று நிகழ்காலத்தாற் குறிப்பிடுகின்றார். அங்ஙனம் திரும்பத்திரும்பச் சொல்லியும் கேளாமல் வல்வினையின்கண் அழுந்துவதால் வினையும் பயனை அடுத்த அடி யில் "வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள் ளத்தே" என்று குறிப்பிடுகின்றார். ஜீவன் எடுக் கின்ற பிறப்புக்கு எல்லையில்லை. வினை பெரு கப் பெருகப் பிறவியும் பெருகிக்கொண்டே போகிறது. கடல் ஆழமும், அகலமும் உடை யது. கடல் பெருகிக் கரைபுரண்டு ஓடும் பொழுது அதனைக் கடல் வெள்ளம் எனலாம். இங்கு மாணிக்கவாசகர் குறிப்பிடுகின்ற வெள் ளம் கடல் போன்று ஆழமும், அகலமும் உடையதாகவும், வேகம் நிறைந்ததாகவும் இருக்கின்றது. அவ்வெள்ளப் பெருக்கில் வீழ்ந் தவர் மூழ்கிப்போவாரேயன்றி தப்ப முடியாது. வினைப்பயனாய் வரும் வெள்ளத்தில் மனமே நீ வீழ்ந்து கெட்டுப்போகின்றாய் என்பதை "வீழ் கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே" என்று மாணிக்க வாசகர் பகர்கின்றார்.

இந்தப் பாடலானது வினையின் வலிவையும், அதன் பயனாகிய பெருந்துன்பத்தையும், அதி லிருந்து விடுபடுதற்குரிய நன்னெறியினையும் காட்டித் தருகின்றது. வல்வினையினின்று விடுபட்டு, அவலக் கடலாய வெள்ளத்தில் வீழ்ந்து ஆழ்ந்து மூழ்காது முக்தியாம் கரை சேருதற்கு ஆழாது காப்பாற்றும் ஈசன் திரு வடியை வாழ்த்தி வணங்குதல் ஒன்றே உபாய மாகும்.

---

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

''அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நான்கும்'' என இறங்கு வரிசையில் (Descending order) எண்ணல் அலங்காரம் அமையுமாறு பாடியிருப்பது சொல் அழகைத் தருகிறது.

அறுபது என்பது தாத்துவிகங்கள். அதாவது தத்துவத்துடன் தொடர்பு உடையவை. பத்து என்பவை, ஞானேந்திரியங்கள் ஐந்து; கன்மேந்திரியங்கள் ஐந்து ஆக பத்து. மெய் வாய், கண், மூக்கு, செவி ஆகியவை ஞானேந்திரியங்கள். அறிவுப் பொறிகள் எனவும் சொல்லுவார்கள். நாக்கு, கால், கை, எருவாய் (ஆசனவாய்) கருவாய் (பிறப்பு உறுப்பு) ஆகியவை கன்மேந்திரியங்கள். தொழில் பொறிகள் எனவும் கூறுவார்கள்.

நம்மிடத்தில் உள்ள அறிவு பிறருக்கு எவ்வாறு புலனாகிறது? நம் உடம்பில் அமைந்துள்ள ஐந்துபொறிகள் மூலம் நடைபெறுகின்ற தொழில்களால் தெரிய வருகிறது. இந்த ஐந்து பொறிகளாலும் நடைபெறுகின்ற தொழில்களுக்கு ஏற்றவாறு நம் உடம்பிலும் ஐந்து தொழில்கள் நடைபெறுகின்றன என நம் முன்னோர் வகைப்படுத்திக் கூறியுள்ளனர்.

அறிவு — மனம் — உடல் ஆகியவற்றுக்கு இடையே உள்ள தொடர்பை நுட்பமான முறையில் நன்கு ஆராய்ந்து அறிந்து கூறியுள்ள நம் முன்னோர் திறன் வியந்து போற்றற்கு உரியது.

நமக்கு வெளியே இருந்து அதாவது உலகத்தில் இருந்து பல வகை அலைவுகள் (Vibrations) நம் உடம்பைத் தாக்குகின்றன. ஐந்து (மெய், வாய், கண், மூக்கு, செவி) பொறிகளும் இந்த அலைவுகளை உணர்ந்து கொள்கின்றன. இந்த அலைவுகளுக்குப் பொருத்தமான எதிர் இசைவு (response) செய்வதற்குக் கன்மேந்திரியங்கள் துணை செய்கின்றன.

எட்டு என்பவை தன்மாத்திரை ஐந்து; அந்தக்கரணம் மூன்று ஆக எட்டு. சுவை, ஒளி, ஊறு (ஸ்பரிசம்) ஓசை, நாற்றம் என்பவை தன்மாத்திரைகள். இவற்றைப் புலன்கள் எனவும் கூறுவார்கள். மனம், புத்தி, அகங்காரம் ஆகிய மூன்றும் அந்தக்கரணம். இவற்றை நுண் உடம்பு உறுப்புகள் எனவும் கூறுவார்கள்.

பஞ்ச பூதங்களில் உள்ள குணங்கள் எல்லாம் தன்மாத்திரைகளில் அடங்கியுள்ளன. அந்தக் கரணங்களில் சித்தம் என்பதைச் சுந்தரர் இங்கே குறிப்பிடவில்லை. கை கால் முதலிய புற உறுப்புகளைப் போல, அந்தக் கரணம் என்பது நுண் உடம்பு உறுப்பு ஆகும்.

ஆறு என்பவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்னும் வித்தியா தத்துவங்கள் ஆகும். வித்தியா தத்துவங்கள் என்றால் என்ன? என்பதைப்பற்றிப் பார்ப்போம்.

ஞானேந்திரியங்கள் ஐந்து, கன்மேந்திரியங்கள் ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, அந்தக்கரணம் மூன்று, வித்தியா தத்துவம் ஆறு; ஆக இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் மாயை என்ற ஒரு பொருளில் இருந்து உண்டாகின்றன. ஏன் உண்டாகின்றன? உயிர் என்ற ஆன்மாவைப் பற்றிக்கொள்ள உண்டாகின்றன. எப்படிப் பற்றிக்கொள்ளும்? தம்முடைய குணங்களாலும், உறுப்புக்களாலும் ஆன்மாவை மயக்கிப் பற்றிக்கொள்ளும். எப்படி மயக்கும்? ஓர் ஆடவனைப் பெண் மயக்குவது போல மயக்கும். அப்படி மயக்கினாலும், அந்த ஆடவனுக்கு ஏற்ற பருவ நிலை அமைந்தால்தானே இயலும். அந்த ஆடவனுக்கு ஏற்ற பருவநிலையை உண்டு பண்ணும் வேலையைப் பெண் செய்வது போன்று, ஆன்மா இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும் ஏற்றுக்கொள்ளும் மன நிலையை இவ் வித்யா தத்துவங்கள் உண்டு பண்ணும்.

அஞ்சு—பூதங்கள் ஐந்து. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. நிலத்தைப்பற்றி நம் முன்னோர்கள் நன்கு பாகுபாடு செய்துள்ளனர் என்பதைப் பல நூல்களில் காணலாம். தீ, வெப்பம், வெப்ப ஆற்றல், வெப்ப இயல்பு ஆகியவற்றையும் நன்கு தெரிந்துள்ளார்கள். நீரின் இயல்பை ஆராய்ந்து எண்ணெயைக் காட்டிலும் தண்ணீர் நிறை மிகுதியானது என்பதையும் கூறியுள்ளனர்.

காற்றைப் பற்றியும் ஆராய்ந்தனர். பலவகை வாயுக்களிலே ஒன்று சடம். தாயின் கருப் பையில் இருக்கும் சடவாயு, மகப்பேறு சமயத் தில் குழந்தையின் மேல் நோக்கி இருக்கும் தலையைப் பிறப்பதற்கு ஏதுவாகக் கீழ் நோக் கித் திருப்ப உதவுகிறது. பூமியில் பிறப்ப தற்கு இந்த வாயு காரணம். ஆகவே பிறவியை வெறுத்த அடியார் ஒருவர், பிறப்பதற்குக் காரணமான இந்தச் சட வாயுவின் மீது கோபங் கொண்டார். ஆகவே அவருக்குச் சடகோபர் என்ற பெயர் ஏற்பட்டது.

சங்கப் பாடல்களில் மேகங்களைப் பற்றிச் சொல்லும்போது, ''மேகங்கள் வலமாக எழுந் தன'' என்று பல இடங்களில் காணப்படு கின்றன. காற்று வீசும் திசையில் மேகங்கள் செல்லும். தமிழ் நாட்டில் வட கிழக்குப் பருவக் காற்றின் காரணமாக நல்ல மழை பெய்கிறது. இக்காற்று வடக்கே இருந்து நேர் தெற்காக வீசுவது இயல்பு. இருந்தாலும் திசை திரும்பித் தென்மேற்காகச் சென்று விடுகிறது. அதா வது வடக்கே இருந்து தெற்கு நோக்கி வீசும் காற்று வலப்பக்கமாகத் திரும்புகிறது.

''பூமி தன்னுடைய அச்சில் தனக்குத்தானே மேற்குத் திசையில் இருந்து கிழக்குத் திசை யாகக் கடும் வேகத்துடன் சுற்றுகிறது. இந்தச் சுழற்சியின் காரணமாக, பூமத்திய ரேகைக்கு வடக்குப் பகுதியில் வீசும் காற்று வலப்புறம் திசை திரும்பும். தெற்குப் பகுதியில் வீசும் காற்று இடப்புறம் திசை திரும்பும்''— (Taylor-Elementary Meteorology) என்பது புவியியல் உண்மை. இவ்வுண்மையை அறிந்து நம் முன்னோர்கள், காற்று வலப்பக்கமாகத் திரும்பி வீசும் என்று கூறியிருப்பது கருதத் தக்கது.

ஆகாயம் வெற்றிடம் என்பதையும், நட்சத் திரங்கள், கோள்கள், கோள்களின் இயக்கம், கோள்களின் இயக்கத்திற்கும் மனித வாழ் வின் ஏற்றத் தாழ்வுக்கும் உரிய தொடர்வு ஆகியவற்றையெல்லாம் பற்றி நன்கு தெரிந்து கூறியுள்ளார்கள்.

''இந்தப் புருடனிடத்தே பிராண வாயு, மனம், இந்திரியங்கள், ஆகாயம், வாயு, தீ, நீர், மண் என்பவை உண்டாயின'' என்று யஜுர்வேத சாகை கூறுகிறது.

''இறைவனுக்குப் புறம்பான பொருள் எது வுமே இல்லை; அவன் தானே உலகமாகவும், உலகப் பொருள்களாகவும் தோற்றம் அளிக் கிறான்'' என வேதத்திற்கு விளக்கம் தரும் ஆதி சங்கரர் கூறுகிறார்.

''பஞ்ச பூதங்களாகவும், பிற பொருள்களா கவும் நாம் காண்கின்ற இப்பேருலகம் நுட்ப மான, அறிவு மயமான ஒரு பரம்பொருளில் இருந்து தோன்றி, பேரளவிற்றான கால எல்லையில் பரிணமித்து விரிந்தது''— [பரி பாடல்–நன்னாகனார்.]

பஞ்ச பூதங்கள் மாயை என்ற பொருளில் இருந்து தோன்றின எனச் சுந்தரர் கூறிய கருத்தையும், பஞ்சபூதங்கள் எவ்வாறு தோன் றின என ஏனையோர் கூறிய இக்கருத்துக் களையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம்.

நான்கு–சுத்த வித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி ஆகிய சுத்த தத்துவங்கள் நான்கு.

இந்தப் பாடலில் சுந்தரர் தத்துவங்களையும், தாத்துவிகங்களையும் பற்றிச் சொன்னார். என்ன காரணத்திற்காகச் சொன்னார்? மாயை யில் இருந்து இவை தோன்றுகின்றன. தோன்றி ஆன்மாவைப் பற்றித் துன்புறுத்து கின்றன. அறிவுடையவர்கள் யாரும், இவற் றின் இயல்புகளைத் தங்களுடைய இயல்பு களாகச் சொல்லமாட்டார்கள். ஆனால், ''இவற் றின் இயல்புகள் எல்லாம் என்னுடைய இயல் புகளே'' என நான் கூறும் அளவுக்கு இவை என்னுடைய அறிவைக் கெடுத்து விட்டன. அறிவைக் கெடுக்கும் இவற்றிற்கு நான் மிகவும் பயப்படுகிறேன்; இறைவா! நீதான் எனக்கு அருள் செய்தல் வேண்டும் என்கிறார். உலக வாதனையில் இருந்து விடுபடவேண்டும் என் பது சுந்தரர் எண்ணம்.

''பண்இடைத் தமிழ்ஒப்பாய் பழத்தினில்
சுவை ஒப்பாய்
கண்இடை மணிஒப்பாய் கடுஇருள் சுடர்ஒப்பாய்
மண்இடை அடியார்கள் மனத்துஇடர் வாராமே
விண்இடைக் குருகாவூர் வெள்ளடை நீ அன்றே''

எனப்பாடுகிறார் சுந்தரர். திருக்குருகாவூர் வெள்ளிடைக் கோயிலில் எழுந்தருளியிருப் பவனே! பர ஆகாயத்தில் நிறைந்திருக்கும் நீ, இவ்வுலகில் வாழும் அடியார்களின் மனத்தில் எவ்விதத் துன்பமும் ஏற்படாதவாறு, இசை

யில் இனிமையைப் போலவும், பழத்தில் சுவை நிறைந்திருப்பதைப் போலவும், கண்ணில் பார்வை கொடுக்கும் கண் மணியாகவும், இருள் நிறைந்த இடத்தில் ஒளியாகவும் விளங்குகின்றாய்!

திருக்குருகாவூர் என்பது தஞ்சை மாவட்டத்தில் உள்ள தலம். வெள்ளடை என்பது கோயிலின் பெயர். வெள்ளடைக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபடுகிறார். இசையில் இனிமை வடிவமாக வந்து சேருபவன் இறைவன். இங்கே தமிழ் என்ற சொல் இனிமை என்னும் பொருளில் வந்துள்ளது. இசைவடிவமாக, இசையில் இனிமை வடிவமாக, ஓசையாக, ஒலியாகத் திகழ்பவன் இறைவன். ஓசை, ஒலி, இசை எல்லாம் இயற்கை. இயற்கைக்குப் புறம்பாக இறைவன் இல்லை. உள்ளத்தை நெகிழச் செய்து, பக்தியைப் பெருக்கும் தன்மை இசைக்கு உண்டு. உள்ளத்தில் பக்தி உணர்வு மிகுதியாகும் போது கண்ணீர் வடித்தல், உடலில் நடுக்கம் காணுதல், மயிர் சிலிர்த்தல், ஓசை எழுப்புதல் ஆகிய மெய்ப்பாடுகள் தோன்றுவது உண்டு.

''பழத்தினில் சுவை ஒப்பாய்''—பழத்தில் நிறைந்திருக்கும் இனிய சுவையாக எம்பெருமான் நிறைந்திருக்கிறான். பழம் இயற்கை; சுவையும் இயற்கை; இறைவனும் இயற்கை. இயற்கையாக எங்கும் நிறைந்திருக்கும் இறைவன், பழத்தில் சுவையாகவும் பரந்திருக்கிறான். ''பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி'' என்கிறார் மணிவாசகர். இவ்வுலகில் பஞ்சபூதங்களாக இறைவன் நிறைந்துள்ளான். பஞ்சபூதங்களுள் ஒன்று நிலம்—மண். மண்ணில் இருந்து தோன்றுவது பழம். மண்ணில் உள்ள—மண்ணாக உள்ள இறைவன் கனியாகவும், கனிச் சுவையாகவும் திகழ்கிறான்.

பழத்தின் நிறத்தைச் சொல்லவில்லை; வடிவத்தைச் சொல்லவில்லை; சுவையைச் சொன்னார். ஏன்? பழத்தின் தன்மை கண்ணுக்குப் பளீர் எனத் தோன்றும் நிறத்தில் இல்லை; பெரிதாகவோ சிறிதாகவோ தோன்றும் வடிவத்தில் இல்லை. கண்ணுக்குப் புலனாகக் கூடிய நிறத்திலும், வடிவத்திலும் இல்லை. கண்ணுக்குப் புலன் ஆகாத சுவையில் தான் பழத்தின் இயல்பு அடங்கியுள்ளது.

அதே போன்று இறைவனும் கண்ணுக்குப் புலன் ஆகாமலே, அந்தர்யாமியாக இருந்து, தோன்றாத் துணையாக இருந்து அருள் பாலிக்கின்றான்.

துவர்க்கக் கூடிய பிஞ்சைப் புளிக்கும் காயாக மாற்றி, புளிக்கும் காயினை இனிக்கும் கனியாக மாற்றி இவ்வாறெல்லாம் இயற்கையாகவே இரசாயன மாற்றம் நிகழுமாறு செய்பவன் இறைவன்.

''கண்ணிடை மணி ஒப்பாய்''—கண்ணுக்குப் பார்வை கொடுக்கும் சக்தியான கண்மணியாக இறைவன் இலங்குகிறான். கண் புற உறுப்புகளுள் ஒன்று. கண் இமை, வெள்ளை விழி ஆகிய கண்ணின் புற உறுப்புகள் இருந்தாலும், பார்க்கும் ஆற்றலைத் தருவது கண் மணி ஆகும். நம்மில் நாமாக இருந்து பார்க்கிறான் இறைவன்.

''கடு இருள் சுடர் ஒப்பாய்''—கடுமையான இருட்டில், நல்ல வழியைத் துலக்கிக் காட்டும் சுடர் ஒளியாகக் கடவுள் காட்சி தருகிறார். ஒளி மயமானவன் இறைவன். ''சோதியே சுடரே சூழ் ஒளி விளக்கே'' என்றெல்லாம் கூறுவார்கள். கடவுளையும், மகான்களையும் சுடருக்கு ஒப்பாகக் கூறுவது உண்டு. துருவன் துருவ நட்சத்திரமாக ஒளி விடுகிறான்; அருந்ததி அருந்ததி நட்சத்திரமாகப் பிரகாசிக்கிறாள் என உயர்ந்தவர்களை ஒளி மயமாக்கிக் கூறுவது உண்டு.

அஞ்ஞான இருளில் மூழ்கி வாழ்க்கையாகிய பாதையில் துன்பப்படும்போது ஞான ஒளியை நல்கி வழி நடத்திச் செல்பவனும் இறைவனே.

இசையில் இனிமையாக விளங்குகிறான் என்று சொல்லும் போது இறைவன் செவிக்கு இன்பமாகத் திகழ்கிறான். பழத்தினில் சுவையாகத்திகழ்கிறான் என்னும் போது நாவுக்குச் சுவையாகக் கடவுள் விளங்குகிறான். கண்ணில் மணியாகத் திகழ்கிறான் என்னும்போது காண்கின்ற பொருளாகத் திகழ்கிறான். கடு இருள் சுடர் ஒப்பாய் என்று சொல்லும்போது, காணப்படு பொருளாக இறைவன் ஆகிறான். இவ்வாறு எம்பெருமான் ஓசை, சுவை, ஒளி ஆகிய தன்மாத்திரைகளாகத் தோற்றம் தருகிறான்.

தமிழ் இசை பாடியும், தமிழ் இசையைக்

கேட்டும் அனுபவம் உடையவர் சுந்தரர். அந்த இசையில் சிவபெருமானைக் காணுகின்ருர். புலன் அடக்கத்திற்கும், உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத சத்துக்கும் பழ உணவு மிகச் சிறந்தது. பழ உணவு உன்பவர் சுந்தரர். தமது சுவை உணர்விலும் இறைவனைக் காண்கிருர். ''தின்னும் வெற்றிலேயும், பருகும் நீரும் கண்ணனே'' என்ருர் ஆழ்வார் ஒருவர்.

தமது கண்மணிக்குள் இறைவனே அமர்ந்து காண்பதாக உணர்பவர் சுந்தரர். ஆகவே, அவருடைய காட்சி நேரிய சீரிய காட்சியாக அமைந்திருந்தது. துன்பமான நாள்களில் எல்லாம் உள்ளத்துக்குள்ளே இருந்து வழிகாட்டி உணர்த்தும் ஒளியாகச் சிவனைக் கண்டவர் சுந்தரர்.

இவ்வாறு தமது அனுபவத்தைப்பாடி, அந்த அனுபவத்தை மற்றவர்களும் அடைய வேண்டும் என்ற பெருநோக்கு உடையவர் நம்பி ஆரூரர்.

''சொல்லிலும் சொல்லின்
முடிவிலும் வேத சுருதியிலும்
அல்லிலும் மாசுஅற்ற
ஆகாயந் தன்னிலும் ஆய்ந்துவிட்டோர்
இல்லிலும் அன்பர் இடத்திலும்
ஈசன் இருக்கும் இடம்
கல்லிலும் செம்பிலுமோ
இருப்பான் எங்கள் கண்ணுதலே''

என்கிருர் பட்டினத்துச் சுவாமிகள். பேசுகின்ற வார்த்தை, வார்த்தையின் பொருள், வேதப் பொருள், இருண்ட வெளி, தூய்மையான ஆகாயப் பெருவெளி, சான்ருேர்களின் இல்லம், அன்புகொண்ட அடியவர்களின் நெஞ்சம் ஆகிய இங்கே எல்லாம் ஈசன் நிறைந்திருப்பான்; இவை இறைவன் இருக்கின்ற இடங்கள் ஆகும். இந்த உண்மையைப் புரிந்துகொள்ளாமல், கற்சிலேயிலும், செம்பு விக்ரகத்திலும் மட்டும்தான் இறைவன் எழுந்தருளியிருப்பான் என்று எண்ணுகிருர்களே என வருந்துகின்ருர் பட்டினத்தார். ''உள்ளத்தில் உள்ளானடி இதனை உணர வேண்டுமடி'' என்கிருர் கவிமணி. ''உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்பு ஆலயம்'' என்பது திருமூலர் வாக்கு.

''தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும்
சார்கினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையே தரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுறவு இல்லேயே.''

— புலவர் பெருமக்களே! அவர்களேயே புகழ்ந்து பாடி, அவர்களின் விருப்பம் போல் எல்லாம் பேசி, அவர்களேயே சார்ந்து வாழ்ந்து பணிவிடை செய்து இவ்வாறு எல்லாம் அவர்கள் விரும்பும்படி வாழ்ந்தாலும், அப்படி வாழ்கின்றவர்களுக்கு எந்த உதவியும் செய்யாத உலோபிகளைப் புகழ்ந்து பாடி என்ன பயன்? ஒரு பயனும் இல்லே. எனவே, அப்படிப்பட்ட உலோபிகளைப் பாடாதீர்கள்! புகலூரில் எழுந்தருளியுள்ள எம்பெருமானைப் புகழ்ந்து பாடுங்கள். அப்படிப் புகழ்ந்து பாடினல், இவ்வுலக வாழ்வுக்கு வேண்டிய உணவு கிடைக்கும்; உடை கிடைக்கும்; புகழும் உண்டாகும். துன்பங்கள் எல்லாம் நீங்கிவிடும். இதுமட்டும் தானு பயன்? மறுபிறவியில், சிவலோக பதவியும் கிடைக்கும்; இதற்கு எவ்வித ஐயப்பாடும் இல்லே'' என்கிருர் சுந்தரர்.

சுந்தரர் பிரத்தியட்ச மனிதர். உள்ளதை உள்ளவாறு காண்கிருர். நேராக வாழவேண்டிய மனிதன் கோணல் புத்தியுடன் வாழ்கிருனே என அறிந்து வருந்துகிருர். தவறு செய்கின்ற, கீழான பண்பு உடையவனிடத்திலே சென்று, நீ செய்வது தவறு எனச் சுட்டிக்காட்டினல், அதனை ஏற்றுக்கொள்ளக் கூடிய மனப்பக்குவம், பண்பட்ட அறிவு அவனிடத்தில் இல்லே. சொல்லுபவனுக்கே தீமை வந்தாலும் வரலாம். அல்லது சொல்லும் சொல்லுக்குப் பயன் இல்லாது போய்விடும்.

இந்தக் கண்கூடான உண்மையைச் சுந்தரர் அறிவார். வித்துக்களே விதைத்துக்கொண்டே போகிறேன்; முளைக்கிற இடத்தில் முளைக்கட்டும் என்று எண்ணித் தம் வாக்கைச் சுந்தரர் பயன்படுத்தவில்லே. யாரிடத்தில் சொன்னல் ஏற்றுக்கொள்ளுவார்களோ, அந்த வார்த்தைக்கு மதிப்பு உண்டோ அப்படிப்பட்டவர்களேப் பார்த்துப் பேசுகிருர்.

# அச்சம் தவிர்

(சுவாமி துருவானந்தர்)

இரவில் சென்ற மனிதன் ஒருவன் இருளைக் கண்டு ஓவென்று கதறினன். அவனைக் கலங்க வைத்துக் கதறும்படி தூண்டியது எது? திறமையான மாணவர்கள் சிலர் திறமைக் கேற்ற தகுதியிருந்தும் தேர்வில் வெற்றி பெருது போவது ஏன்?

ஏராளமான அறிவிருந்தும், எப்படிப் பேச வேண்டும் என்ற வழி தெரிந்தும் பலபேர் அமர்ந்திருக்கும் கூட்டத்தைக் கண்டு பதறி நடுங்கும்படி ஒருவனைச் செய்வது எது? பயம்! பயம்!! பயம்!!! அச்சம் என்று ஒன்று அகத்தில் இருப்பதால்தான், புறத்தேயிருக்கிற இருளும், பெரும்கூட்டமும் மனிதனை நிலைகுலையும்படி செய்துவிடுகிறது. அறியாமை காரணமாக அச்சம் பிறக்கிறது. அச்சம்கொள்ளுதல் பொருளற்றது என்பது ஆராய்ந்து பார்த்தால் நமக்கே விளங்கும்.

பறவைகளும்,விலங்குகளும் அஞ்சாது போய் வருகிற இருளில் மனிதன் போகப் பயப்படுவது ஏன்? ஆறு அறிவு உள்ளவன், எதையும் எண்ணிச் சிந்தனை செய்து சாதிக்கும் ஆற்றல் படைத்த மனிதன் அஞ்சக் காரணம் என்ன? ஏதோ இனம் தெரியாத பயம் என்ற ஒரு உணர்ச்சி உள்ளத்தினுள் தோன்றி, உள்ளத்தில் நிலைபெற்று அவனைப் பயந்தாங்கொள்ளி ஆக்குகிறது. பயம் என்கிற இந்தக் கீழான உணர்ச்சி எங்கேயோ இருந்து புதிதாக வந்து நம் உள்ளத்தினுள் ஆதிக்கம் கொண்டதன்று. நாம் சிற்றுயிரிலிருந்து மானுடப் பிறவி எடுத்துள்ள இதுவரை அந்த உணர்ச்சிக்கு அடிமைப்பட்டு அதனை நம் உள்ளத்தினுள் வளர இடம் கொடுத்துவிட்டோம். அதனுடைய ஆதிக்கம் அதிகமாகவே அந்தப் பய உணர்ச்சியிலிருந்து விடுபடமுடியாது திண்டாடித் தவிக்கிறோம். உள்ளத்தில் எழக்கூடிய எத்தனையோ சித்த விகாரங்களில் பயம் அல்லது அச்சம் என்ற இழிகுணமும் ஒன்று. இது உலகத்தில் தோன்றியுள்ள எல்லா ஜீவர்களிடத்திலும் இருக்கிறது. ஆத்ம சொருபத்தை அறிந்தவனே அச்சமற்று ஆனந்தமாக இருக்கிறான். இறைவனின் அருள் கடாட்சம் பெற்றவனே அச்சம் என்ற உணர்ச்சியில்லாது அருள்செல்வனாக அவனியில் நடமாடுகிறான். மற்றவர்களனைவரும் தங்களால் உண்டுபண்ணப்பட்ட அச்சத்தால் தாக்குண்டு அழிகிறார்கள். அச்சம் புற்றுநோய் போன்று உள்ளத்தில் இருந்து கொண்டு மக்களை முன்னேறவிடாது அரித்துத் தின்னுகிறது. நடப்பன, ஊர்வன, பறப்பன அனைத்தும் எதிரிகளிடத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளப் பயந்து ஓடுகின்றன. அங்ஙனம் பயந்தே வாழ்க்கையைத் தொடங்கிய அவைகள் மானுடப் பிறவி எடுத்தும் பயப்படாதவைகளுக்குப் பயந்து வாழ்வதே விந்தையிலும் விந்தையாக இருக்கிறது. ஒருவனை வீரன் என்று சொல்லுகிறோம் ஏன்? அவன் எதற்கும் அஞ்சுவது கிடையாது. கோழைத்தனத்திற்கும் அவனுக்கும் வெகுதூரம். அவனது எண்ணம், சொல், செயலில் ஆண்மை, அஞ்சாமை மிளிர்கிறது. அந்தத் தெய்விகக் குணம் பார்க்கிற மற்றவர்களைக் கவருகிறது. ஆகவே அவனை மற்றவர்கள் வீரன், அஞ்சா நெஞ்சினன் என்றெல்லாம் அவனுக்குப் புகழ் மாலை சூட்டுகின்றனர். அங்ஙனம் புகழப்படுபவன் பயந்து நடுங்குவானாகில், எதற்கும் அஞ்சும் கோழிக்குஞ்சு இதயம் படைத்தவனாக இருந்துவிட்டால் அவனைக் கோழை, பயங்கொள்ளி, ஒன்றுக்கும் உதவாதவன் என்றெல்லாம் சமுதாயம் இகழத் தொடங்குகிறது. வீரன் ஒருவனுக்கு ஒருதடவைதான் மரணம். ஆனால் கோழையோ, எப்பொழுதெல்லாம் பயப்படுகிறானே அப்பொழுதெல்லாம் செத்தவனாகிறான். அஞ்சாத இயல்பு படைத்தவன் எங்கும் எப்பொழுதும் முதன்மை நிலையில் இருக்கிறான். எப்படிப்பட்ட சூழ்நிலையையும் தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொள்ளுகிறான்.

சூழ்நிலைக்கு ஏற்றாற் போன்று பயம் உருவாகிறது. நகரங்களில் உள்ள பெரிய கடைகளையும், வீடுகளையும் இரவில் காவல் காக்கும் தொழிலை மேற்கொண்டவன் கூர்க்கா, சிப்பாய். அவன் கத்திக்கோ, துப்பாக்கிக் குண்டுக்கோ பயப்படுவது கிடையாது. ஆனால் ஒரு தேளைக் கண்டு அவன் அஞ்சுகிறான்.

வேட்டைக்காரன் ஒருவன் காட்டில் உள்ள புலிகளைக் கண்டு அஞ்சுவது கிடையாது. ஆனால் வனஇலாகா அதிகாரிகளைக் கண்டு அஞ்சிவாழுகிறான். டாக்டர் ஒருவர் தினமும் பலர்க்கு அறுவை சிகிச்சை செய்கிறார்; பிரசவ கேஸ்களைக் கவனிக்கிறார். ஆனால் தன்னுடைய மனைவிக்கோ, மகளுக்கோ அத்தகைய அறுவை சிகிச்சை செய்ய மனம் வருவதில்லை; வேறொரு டாக்டரைத் தேடி ஓடுகிறார். தொழிலாளியைக் கண்டால் முதலாளிக்குப் பயம். போலீஸைக் கண்டால் திருடனுக்குப் பயம். சர்க்கிளைக் கண்டால் போலீஸுக்குப் பயம். மானேஜரைக் கண்டால் குமாஸ்தாவுக்குப் பயம். அதே போன்று வல்லரசுகள் ஒன்றைக் கண்டு மற்றொன்று பயந்து கிடக்கின்றன. ஆக, தனி மனிதனாயிருந்தாலும் சரி, ஒரு சமுதாயமாக இருந்தாலும் சரி ஒவ்வொருவரும் அச்சத்திற்கு இடம் கொடுத்து அதிலிருந்து எப்படி விடுபடுவது என்று தெரியாது திண்டாடுகிறார்கள். நோய் ஒன்று நம்மிடம் உண்டாகிறது. நோய் இன்னதுதான் என்று அறிந்துவிட்டால் அதற்குச் சிகிச்சை அளிப்பது சுலபம். அதே விதத்தில் நம்மிடம் பயம் இருக்கிறது. அதை நீக்க வழி என்ன என்று ஆர்வமாக இருப்பவர்களுக்கு இங்கு ஆராயப்படும் ஆராய்ச்சி பயன்படும். உடலுக்கு வருகிற பிணிகளுக்கு எந்த வைத்தியரை அணுகினாலும் அதற்கு உடனே நிவாரணம் அவர் மூலம் பெற்று விடலாம். ஆனால் மனத்தில் ஏற்படுகிற பயம், கவலை, துன்பம் முதலிய மனநோய்களுக்குத் தனக்குத்தானே தான் சிகிச்சை செய்யவேண்டும். சிகிச்சை முறை எவ்வாறு? ஆத்மானுபூதி அடைந்த பெருமக்கள் பயம், கவலை போன்ற மனிதனைக் கீழ்மைப்படுத்தும் பிணிகளை அகற்றும் வழிகளைக் காண்பித்துள்ளனர். அந்த வழியில் சென்று, வெற்றிகண்ட அவர்களது அடிச்சுவட்டைப் பின்பற்றுவதே நம் உள்ளங்களில் இதுகாறும் ஊறிப்போயுள்ள கீழான பண்புகளை ஒழிக்க வழியாகும்.

அச்சத்தை அகற்றி ஆன்மீக வாழ்வு வாழ்ந்த பெரியோர்கள் பலர் இருந்திருக்கின்றனர்.

நமது காலத்தில் வாழ்ந்தவர் மகாத்மா காந்தி அடிகள். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர், விவேகானந்த சுவாமிகள் போன்று, பிறக்கும் பொழுதே நிறைஞானியாகக் காந்தியடிகள் பிறந்துவிடவில்லை. சாதாரணமாக நம்போன்று வாழ்ந்தவர். தவறுகள் செய்தும் தன்னைத் திருத்திக்கொண்டவர். எந்தவித சித்தியும் அவருக்குத் தெரியாது. சிறுவராக இருந்த பொழுது இருளைக் கண்டாலே பயந்து விழுந்து விடுவார். இவரது பயந்த சுபாவத்தை அறிந்த ஒரு அம்மையார் ராம நாமத்தை ஜபிக்கும்படி காந்திக்குத் தெரிவித்தார். ராம நாமத்தில் வைத்த சிரத்தையினால் அச்சம் அகன்றது. ஆண்மை பிறந்தது. தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் இந்தியர்களுக்காகத் தன் உயிரைப் பொருட்படுத்தாது பாடுபட்டது அச்சத்தை முற்றிலும் துறந்ததின் விளைவேயாம். இறைவன்தான் இத்தனையுமாக இருக்கிறான் என்றால் நம்மைப் பயமுறுத்துவது எது? ‘அவனுக்கு அன்னியமாக ஒன்று இருந்தால்தானே நம்மை அச்சுறுத்துவதற்கு’ என்று காந்தி போன்றவர்கள் இறைவனைச் சரணடைந்து அச்சத்திலிருந்து விடுபட்டார்கள்.

காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை பரிவ்ராஜகராகச் சுற்றிவந்தவர் விவேகானந்தர். காசியில் நடந்து சென்றபொழுது குரங்குக் கூட்டம் ஒன்று அவரைத் துரத்தியது. அஞ்சாத உள்ளம் படைத்த விவேகானந்தரும் சற்று விரைவாக நடந்தார். விரைவாகச் செல்லச் செல்லக் குரங்குகளும் அவரை விரட்டின. ‘எதிர்த்து நில்’ என்று யாரோ ஒருவர் குரல் கொடுத்தார். அக்கணமே துரத்திவந்த குரங்குக் கூட்டத்தை எரிப்பது போன்று எதிர்த்து நின்றார் விவேகானந்தர். அஞ்சாது நின்ற மகானின் பார்வையைப் பார்த்தவுடன் குரங்குகள் அனைத்தும் சிதறுண்டு நாலாபக்கமும் ஓடலாயின. இவற்றிலிருந்து அவர் கற்றுக்கொண்ட பாடமே மேல் நாட்டில் ஏற்பட்ட இடையூறுகளைப் பொருட்படுத்தாது பெருங் காரியம் ஆற்றத் துணைபுரிந்தது.

சிங்கத்தைக் காட்டிலும் யானை எவ்வளவோ மடங்கு பெரியது. அப்படியிருந்தும் ஒரு சிங்கம் தனியே யானைக் கூட்டத்தைத் தாக்கி அவைகளைக் கதிகலங்கச் செய்துவிடும். இதன் ரகசியம் என்ன? சிங்கம் தன்மீது வைத்த தன்னம்பிக்கையின் விளைவு அது. அச்சத்தை அடியோடு அகத்திலிருந்து அகற்

றியதால் வந்த அதிசயம் அது. தன்னம்பிக்கை மட்டும் இருந்தால் ஒரு யானை மாத்திரம் எத்தனையோ சிங்கங்களைக் கொன்று குவித்துவிட முடியும். ஆனால் அந்த தன்னம்பிக்கையின்மையினால் அச்சத்திற்கு அடிமைப்பட்டு யானைகள் யாண்டும் கூட்டம் கூட்டமாகக் காட்டில் வாழ்ந்து வருகின்றன.

உடல் பலம் இருந்தால் அச்சம் அகன்று விடும் என்பது சரியன்று. எத்தனையோ பயில்வான்களும், வீரர்களும், எதிரிகளைப் புறமுதுகிட்டு ஓடச் செய்யும் ஆற்றல் படைத்தவர்களும் தங்களைக் குறித்து மக்கள் கூறும் நிந்தை மொழிகளுக்கு அஞ்சுகிறார்கள். கையில் துப்பாக்கி, கத்தி போன்ற ஆயுதம் இருந்தும் ஒருவன் உள்ளத்தில் அச்சம் குடிகொள்ளுமேயானால் அந்த ஆயுதங்களால் அவன் அடையும் பயன் என்ன? ஆனால் 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்ற பழமொழிப்படி அச்சமில்லாதவனுக்கு ஆயுதம் தேவையில்லை. அவனுடைய தளரா மனதே எதிரியைத் தலைதெறிக்க ஓடச் செய்துவிடும்.

சரீரமே பயத்திற்கு உறைவிடம். இந்தச் சரீரத்தை நாம் என்று எண்ணும் பொழுது நாம் பயரூபமாக ஆகிறோம். இந்த உடல் புழுக்களுக்கு இரையாகிவிடும். இதற்கு அப்பால் உள்ள அமர ஆத்மன் நாம். துப்பாக்கியாலும், எந்தக் கருவியினாலும் தாக்கமுடியாத இரும்புக் கவசத்தை உடல் முழுவதும் போர்த்தியிருந்தால் நாம் எந்த எதிரிக்காவது பயப்படுவோமா? ஆயுதம் எதனாலும் நம்மைக் கொல்ல முடியாது என்று உறுதியான நம்பிக்கை நமக்கிருக்குமல்லவா? அதே பாங்கில் இந்தச் சரீரத்தை உடைத்திருக்கும் நான் அழியாத ஆத்மன். என்னை எதனாலும் அழிக்கமுடியாது என்று எண்ணுகிறபொழுது அஞ்சாமை உள்ளத்தில் உருவெடுக்கிறது. ராமதீர்த்த சுவாமிகள் இமயமலைக் காடுகளில் திரிந்தபொழுது ஐந்தாறு கரடிகள் அவரைத் தாக்க ஓடிவந்தன. 'நான் உடலல்லன், நானே கடவுள், நெருப்பு என்னை எரிக்காது, ஆயுதம் என்னை வெட்டாது' என்ற பாவனை நிரம்பியவராக அந்தக் கரடிகளின் முகத்தை உற்றுப் பார்த்தார். அவைகள் உடனே ஓடிப்போய்விட்டன. இதே போன்று ஒரு புலியும் அவருடைய இத்தகைய பாவனையால் இவரைப் பார்த்துவிட்டு ஓடிவிட்டது. அகத்தில் இல்லாதது புறத்தில் இல்லை என்று பழமொழி உண்டு. உள்ளத்தில் அச்சமிருந்தால் புறத்திலும் அதற்கேற்றபடி காட்சி மாறும். பயம் என்ற ஒன்று மட்டும் இல்லையானால் புலி சிங்கங்களைக் கூட நாம் சுலபமாகப் பழக்கி விடலாம்.

உள்ளத்தில் எழுகிற கீழான உணர்ச்சிகளை மாற்றியமைக்க மேலான எண்ணங்களை எண்ணுவது உடன்பாட்டு முறையாகும். உள்ளத்தில் எதை முன்னிட்டாவது பயம் தலையெடுத்தால் இங்ஙனம் தனக்குத்தானே ஆழ்ந்து மூச்சை உள்ளுக்கிழுத்துச் சொல்லிக்கொள்ள வேண்டும் :

நான் தைரியம் படைத்தவன்—ஓம்! ஓம்! ஓம்!
நான் எதற்கும் அஞ்சாதவன்—ஓம்! ஓம்! ஓம்!
எதுவும் என்னை அச்சுறுத்தமுடியாது—ஓம்! ஓம்! ஓம்!

இங்ஙனம் தியானத்தில் அமர்ந்திருக்கும் பொழுது ஆழ்ந்து எண்ணினால் மனது அந்தமயமாகிறது. ஒரு எண்ணத்தைத் தொடர்ந்து உணர்ச்சி வருகிறது. பயம் கொள்ளுகிறபோது இத்தகைய 'தைரியம்' ஊட்டும் பாவனையை நமக்கு நாமே எண்ணுகிறபொழுது பயம் இருக்குமிடம் தெரியாது நம் உள்ளத்தை விட்டு அகலுகிறது. பயத்தை வென்றவனே பாரமார்த்திக வாழ்க்கையில் தீவிரமாகச் செல்லத் தகுதி உடையவனாகிறான்.

பயத்தை வெல்லுவதற்குத் தன்னம்பிக்கையை வளர்ப்பது ஒரு உபாயம். 'நம்மால் முடியும்' என்கிற எண்ணத்தை முதலில் வளர்த்துக் கொள்ளவேண்டும். 'முடியும்' என்பது ஒரு பெரிய மந்திரக்கோல். எந்த ஒரு வேலையையும் செய்வதற்கு முன் 'இதை நிச்சயம் என்னால் செய்ய முடியும்' என்று ஆழ்ந்து எண்ணிச் செயலில் உற்சாகத்தோடு ஈடுபடுகிறபொழுது பயம் பறந்து விடுகிறது. வெற்றி தேடி வருகிறது. மற்றவர்களால் முடியக்கூடிய காரியங்கள் நம்மால் எப்படி முடியாமல் போகும் என்று நமக்கு நாமே கேட்டுக்கொள்வோம். எது முடியும் எது முடியாது என்பதை யார் நிர்ணயிப்பார்கள்? காரியங்கள் வெற்றி பெறுகிறதோ இல்லையோ இந்தக் காரியம் நம்மால் ஆகுமா என்று அச்சப்பட்டுக்கொண்டு ஆயாசத்துடன் அமர்ந்தால் ஏற்படக்கூடிய பலன்

என்ன? பயம் உள்ளவன் வாழ்வில் எந்தத் துறையிலும் முன்னேற முடியாது. தவறு செய்தவன் பயப்படத்தான் செய்வான். பொய் பேசியவனுக்குப் பயம் உள்ளத்தில் இருந்து உறுத்திக் கொண்டுதானிருக்கும். பொருள் பற்று உள்ளவன் வீட்டிலுள்ள மனைவி மக்கள் எல்லாரிடமும் சந்தேகக் கண்ணோடுதான் வாழ்ந்து வருவான். அவனுக்கு இரவில் நிம் மதியாகத் தூக்கம் இராது. தன்னம்பிக்கை உள்ளவனிடத்தில் அச்சம் இருக்காது. பயம் உள்ளவனிடத்தில் தன்னம்பிக்கை இராது. தன்னம்பிக்கையில்லாது அச்சம் குடிகொள் ளும் மனத்திற்குச்சிறு குப்பைமேடுகூட கடக்க முடியாத பெரிய மலையாகத் தோற்றமளிக்கும். பாவனைக்கேற்ப பலனும் உண்டு. பயப்படா தவன் போன்று பாவனை செய்தால் அந்தப் பாவனையே அவனை எதற்கும் பயப்படாதவ னாக ஆக்கிவிடும்.

பெற்றோர்களும், ஆசிரியர்களும் குழந்தை களுக்கு வீரக்கதைகளைச் சொல்லி அச்சம் என் பதே இன்னது என்று அவர்கள் அறியாதிருக் கும்படி வளர்க்க வேண்டும்.தாங்கள் சொல்லிய படி குழந்தைகள் கேட்கவில்லை யென்றால் பேய், பிசாசு,பிள்ளை பிடிக்கிறவன், பூச்சாண்டி முதலிய கற்பனைக் கதைகளைச் சொல்லி அவர் களைப்பயந்துசாகும் கோழைகளாக ஆக்கிவிடக் கூடாது. சிறுவர்களின் மனது பச்சைக் களி மண்ணுக்கு நிகர். நாம் எதைச் சிறுவயதில் அவர்களுக்குப் புகட்டுகிறோமோ அது அவர்கள் உள்ளத்தில் ஆழப்பதிகிறது. ஆயுள் முழுவ தும் அந்த எண்ணம் அவர்களை விட்டு நீங்குவ தில்லை. கதை கேட்பதில் ஆவல் உள்ளவர் கள் சிறுவர் சிறுமியர். நாட்டுக்கு உழைத்த நல்லவர் வரலாற்றையும், இறைவனை அடைந்த மகாத்மாக்களின் வரலாற்றையும் தாய்,தந்தை, ஆசிரியர்கள் தெரிந்து வைத்திருக்கவேண்டும். சிறுவர் சிறுமியர்க்கு அவ்வரலாறுகளைப் புகட்டவேண்டும். விவேகானந்தர், மகாத்மா காந்தி, சத்ரபதி சிவாஜி முதலான பெரு மக்களை அவர்களின் இலட்சிய புருஷர்களா கக் காட்டித் தரவேண்டும். சினிமா நடிகர், நடிகைகளோ, அரசியல்வாதிகளின் அலங் கோலங்களோ உள்ளத்தில் இடம் பெறாது ஒவ்வொரு நாளும் சிறுவர், சிறுமியர் தன்னம் பிக்கைக்கும், அஞ்சாமைக்கும் இடம்கொடுத்து வளருவார்களானால் எதிர்கால சமுதாயம் உலக நாடுகளுக்கு வழிகாட்டியாக அமையும். இப்பெரும் பொறுப்பை மனதில் வைத்தாவது தாய், தந்தை, ஆசிரியர் முதலிய பெரியவர்கள் தங்களை இந்த உன்னத மார்க்கத்தில் அர்ப் பணித்தால் இவர்களைப் பார்க்கிற மற்றவர்கள் நல்வழி திரும்புவது உறுதி. அதற்காகப் பெற் றோர்கள்மீதும், பெரியவர்கள்மீதும் மரியாதை, பணிவு இல்லாத தான்தோன்றித்தனத்திற்கு ஆளாகும்படி குழந்தைகளை வளர்த்துவிடவும் கூடாது. பயமில்லாது, அறிவை அகல விரித்து ஆராய்ச்சி செய்து நன்மை கடைப்பிடிக்கும் சமுதாயம் மேன்மையுறும். நம்மிடையே உள்ள பயம் அகல நாள்தோறும் நல்லறிவை வளர்ப் பது அவசியம். அபய சொரூபமாக இருக்கும் ஆண்டவனை நாள்தோறும் காலையும் மாலை யும் தியானம் செய்தல், அவனது திருநாமத் தைச் சிரத்தையோடு ஓதுதல் அகத்திலுள்ள அச்சத்தை அகற்ற எளிய வழியாகும்.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

டிசம்பர் மாதம் 21ஆம் தேதி புதன்கிழமை வைகுண்ட ஏகாதசி. அன்று குருகுல மாணவர் கள் உபவாசம் இருந்து 24 மணிநேரம் அகண்ட நாம பஜனையும், கீதா பாராயணமும் செய் வார்கள்.

டிசம்பர் மாதம் 25ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று பழைய மாணவர்கள் சங்கம் தபோவனத்தில் கூடும். அன்று கிறிஸ்து ஜயந்தியை முன்னிட்டு இரவு ஒருமணி நேரம் மாணவர்கள் ஐக்கிய வணக்கம் செய்வார்கள்.

1978ஆம் வருடம் ஜனவரி மாதம் 1ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று அன்னை ஸ்ரீ சாரதா தேவியாரின் ஜயந்தியை முன்னிட்டுக் குருகுல மாணவர்கள் 24 மணிநேரம் அகண்ட நாம பஜனையும், நண்பகல் 1 மணி நேரம் ஐக்கிய வணக்கமும் செய்வார்கள்.

ஜனவரி மாதம் 9ஆம் தேதி திங்கட்கிழமை யன்று பிற்பகல் 4 மணிக்கு மேல் ஸ்ரீ விவேகா னந்த வித்தியாவன குருகுல மாணவர்கள் பொங்கல் விடுமுறைக்காக அவரவர் ஊருக் குப் புறப்படுவார்கள்.